# ஞான சாராம்ச அனுபவ சுருக்கம்

## தெளிவுரை



தெளிவிப்பவர்

**பிரம்மஸ்ரீ திருவடித்தூளி சுவாமிகள்**

வெளியீடு

ஸ்ரீ திருவடிக் குழந்தைகள்

மேட்டூர் அணை – I

Br. Lakshmanji

உ

ஸ்ரீ சத்குரு திருவடி துணை !

10-1

# ஞான சாராம்ச அனுபவ சுருக்கம்.

(ஸ்ரீ மத் ரிபு கீதையின்)

## பாடல்களும் விளக்கமும்

தெளிவிப்பவர்
**பிரம்மஸ்ரீ திருவடித்தூளி சுவாமிகள்**

வெளியீடு :
**ஸ்ரீ திருவடிக் குழந்தைகள்**
மேட்டூர் அணை - 1

உ

ஸ்ரீ சத்குரு திருவடி துணை !

## முன்னுரை :

அன்பும் அறிவும் ஓர்மித்த குழந்தைகளே !

உங்கள் அடக்கத்தினால் ஆத்ம சுகம் பெறுவீர்களாக. அந்த அடக்கம் என்பது பேதமாக பார்க்காமலும், கருணை நிறைந்த பார்வையிலும், ஓசைகளை விகாரமாக கேளாமல், அவைகளை விபரீதப்படுத்தாமல் சாந்தமாகவும், அமைதியாகவும் கேட்கப் பழகிக் கொண்டால் உங்கள் நாவு அடங்கும். உங்கள் நாவு அடங்கினால் எண்ணம் அடங்கும். எண்ணம் அடங்கினால் மனம் அடங்கும். மனம் அடங்கி அழிந்தால் ஆத்ம சுகம் தாமே கிட்டும்.

அவன் அருளால் அவன் தாள் வணங்கி என்ற முதுரைப் படி ஸ்ரீ சத்குரு கிருபையினால் அவர் உணர்த்த, உணர்ந்து ஸ்ரீமத் ரிபு கீதையின் ஞான சாராம்ச அனுபவ சுருக்கம் என்ற இந்த 67 (அறுபத்து ஏழு) பாடல்களுக்கு சிறிதளவு விளக்கம் தருகிறோம். படித்து, உணர்ந்து, அனுபவித்து, ஆனந்தம் பெறுவீர்களாக !

- திருவடித்தூளி



ஸ்ரீ சத்குரு திருவடி துணை

## குரு வணக்கம் !




குருர் பிரம்மா குருர் விஷ்ணு :
குருர் தேவோ மஹேஸ்வரஹ !
குருர் ஸாக்ஷாத் பரம் பிரம்மம்
தஸ்மை ஸ்ரீகுரவே நமஹ !!

**ஸ்ரீ சத்குருவே பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேஸ்வரன், சதாசிவம் ஆகிய ஐவரும் ஆவர். இவர்களுக்கெல்லாம் அதீதமாய் இருக்கக்கூடிய பரப்பிரம்மமும் ஸ்ரீ சத்குரு தேவரே. அவருடைய திருவடியை நமஸ்கரிக்கிறோம்.**



தெளிவு ஸ்ரீ ஸத்குரு திருமேனி காண்டல்
தெளிவு ஸ்ரீ ஸத்குரு திருவார்த்தை கேட்டல்
தெளிவு ஸ்ரீ ஸத்குரு திருநாமம் செப்பல்
தெளிவு ஸ்ரீ குருவுரு சிந்தித்தல் தானே !!

**உள்ளத்தில் தெளிவு பெற ஸ்ரீ குரு தேவரின் தூல சொரூபத்தைக் காண்கிறோம்.**

**உள்ளத்தில் தெளிவு பெற அவருடைய வார்த்தைகளைக் கேட்கிறோம்.**

**உள்ளத்தில் தெளிவு பெற அவரிடம் கேட்டனவற்றை மனனம் செய்கிறோம்.**

**உள்ளம் தெளிவு பெற்று பூரணத்துவம் பெற, கேட்டனவற்றை அனுபவ ரீதியாக, தைல தாரை போல் சிந்தித்து, சிந்தித்து, சிந்தித்து சுத்த சிவமாகிறோம்.**

ஓம் அஸதோ மா ஸத் கமய !
தமஸோ மா ஜோதிர் கமய !
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய !!

## நூல் பெருமை !

கலனமிலா அகண்டபர மோக்ஷத்திற்கு

காரணமாம் அஹம்பிரம்ம நிச்சயத்தை

சலனமற திடமாகத் தருவதற்கு

சாற்றிய இந்நூலென மற்றெவையுமில்லை

நிலைமருவும் பரமசிவன் எமக்கு நேரே

நிகழ்த்திய இந்நூலுக்கு நிகரொன்றுண்டோ

பலவிதமாம் உலகத்தும் இந்த நூலே

பரவிய எந்நூலுக்குஞ் சாரமாகும் !

- ரிபு முனி -

காலாதீதமான பர மோக்ஷத்தை அடைவதற்கு இந்த ரிபு கீதையைத் தவிர வேறு எந்த நூலும் சார்ந்து வராது. ஸ்ரீ சத்குரு சொரூபமாகிய ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி, ரிபுவாகிய எமக்குச் சொன்ன உபதேச கருத்துக்களை, ஸ்ரீ மத் ரிபு கீதை என்னும் நூலாக அவர் கருணையினால் ஸ்ரீ மெய் அடியார்களின் திருப்பாதங்களில் சமர்ப்பிக்கிறோம்.



## இறை வணக்கம்

பாடல் : 1

அகிலஜகன் நாயகனாய் அநந்தசக்தி
அமைவுற்ற அகண்டசிவன் சரணம் போற்றி
நிகில ஜகன் மாதாவாய் நித்யானந்த
நிஜவடிவாம் அம்பிகையின் சரணம் போற்றி
சகலவித விக்கினமும் தீர்த்தெல்லோர்க்கும்
சாதகமாய் விநாயகநற் சரணம் போற்றி
தகைமைமிகும் அன்பர்க்குச் சிவ ஞானத்தை
தந்தருளும் சண்முகநற் சரணம் போற்றி !!

**விளக்கம் :**

உலக நாயகனாகவும், பக்குவ ஆன்மாக்களின் சத்குருவாகவும் அமைந்த ஸ்ரீ அகண்ட சிவனின் திருவடிகளை போற்றுகிறோம். அந்த மஹத்தின் சரிபாதியாக அமர்ந்த நித்திய ஆனந்தத்தை கொடுக்கக்கூடிய ஸ்ரீ அம்பாளின் திருவடியை போற்றுகிறோம். பிரணவ சொரூபமாகிய சகல விக்கினங்களையும் தீர்க்கக் கூடிய ஸ்ரீ விக்னேஷ்வரரின் திருவடியை போற்றுகிறோம். கூர்ந்த அறிவாகிய ஸ்ரீ வேலவனின் திருவடியைப் போற்றுகிறோம்.



## சகலமும் மனமே !

பாடல் : 2

மனததுவே அயன்ஹரி ஹரனுமாகும்
மனததுவே நினைப்பினால் சிருஷ்டியுமாகும்
மனததுவே எழுச்சியினால் ஸ்திதியுமாகும்
மனததுவே தம்மறப்பினால் அழிவுமாகும்
மனததுவே தேவர்கள் அனைத்துமாகும்
மனததுவே அவரவர்கள் செய்கையுமாகும்
மனததுவே சுராசுரர் அனைவருமாகும்
மனததுவே அறக்கருணையும் மறக்கருணையுமாமே !

***விளக்கம் :***

எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகும். எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே தன்னுடைய சங்கல்பத்தினால் இந்த உலகை சிருஷ்டிக்கிறது. எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே தன்னுடைய இனிமையான எண்ணத்தினால் சிருஷ்டித்ததை காக்கிறது. எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே தன்னுடைய மறதியினால் தன் சிருஷ்டிகளை அழித்துக் கொள்கிறது. எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே முப்பத்து முக்கோடி தேவர்களையும் சிருஷ்டிக்கிறது. எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே அவர்களுடைய அனைத்து மாயா காரியங்களையும் செய்கிறது. எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே அனைத்து ஜீவ கோடிகளையும், அசுரர்களையும் சிருஷ்டிக்கிறது. எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே அறக்கருணையாக அதாவது சாந்த சொரூபியாக அவரவர் தேவைகளையும் பூர்த்தி செய்கிறது. அதுவே மறக்கருணையாகவும், அதாவது கோர சொரூபமாக வரக்கூடிய ஜீவர்களின் பாபங்களை பரிஹரித்து (அழித்து) நல்லருள் புரிகிறது.

பாடல் : 3

மனததுவே புத்தியும் சித்தமும் ஆகும்
மனததுவே அஹம்காரம் அனைத்துமாகும்
மனததுவே ஜீவனுமாம் அதன் பந்தமுமாகும்
மனததுவே கர்த்தாவும் போக்தாவுமாகும்
மனததுவே சங்கல்பம் அனைத்துமாகும்
மனததுவே சந்தேகங்கள் அனைத்துமாகும்
மனததுவே மலினதிசையில் உலகமுமாகும்
மனததுவே மஹத்தானால் பரப்பிரம்மம் தாமே ஆகும்!

**விளக்கம் :**

எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே கற்பனை செய்யும் புத்தியாகவும், உறுதிபடுத்தும் சித்தமாகவும் அனுபவ நிலையில் **நான், என்னுடையது** என்று அபிமானித்து, அஹங்கரித்து இனிமையையும், துன்பத்தையும் தமக்கு தாமே ஏற்றுக் கொள்கிறது.

எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே அனைத்து ஜீவ சொரூபமாகவும், சொந்தம் கொண்டாடிய தன்மையினால் பந்தமாகவும் 'என்னால் முடியும்' என்ற கர்த்தாவாகவும் (தலைவனாகவும்), அனைத்தையும் இனிமையுடன் புசிக்கின்ற போக்தாவாகவும் (அனுபவசாலியாகவும்), போக்கியமாகவும் (அனுபவ வஸ்துக்களாகவும்) ஆகிறது.

எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே அனைத்து கற்பனைகளையும் உருவாக்கி சந்தேகக் குற்றங்களையும் கலக்கம், பயம் போன்ற அனைத்து விரோத சக்திகளையும் தமக்குத்தாமே உண்டாக்கிக் கொள்கிறது.

எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே மலின திசையில் அதாவது உலக இனிமை நுகர்ச்சிகளினால் அனைத்து உலகங்களையும் சிருஷ்டிக்கிறது. எண்ணத்தினால் வருகின்ற இந்த மனமே பூரணமான தன் யதார்த்த சொரூபத்தில் நிலைத்து நின்றால் அதுவே ஸ்ரீ பரம்பொருளான **பரப்பிரம்மம்** ஆகிறது.

## எண்ணமே சகலமும்

பாடல் : 4

நினைவெதுவோ அதுதானே ஜீவனாகும்
நினைவெதுவோ அதுதானே ஈசனாகும்
நினைவெதுவோ அதுதானே ஜகமுமாகும்
நினைவெதுவோ அதை சிருஷ்டிக்கும் மனமுமாகும்
நினைவெதுவோ அதுதானே காமமாகும்
நினைவெதுவோ அதுதானே கர்மாவாகும்
நினைவெதுவோ அதுதானே துக்கமாகும்
நினைவெதுவோ அதுதானே அனைத்துமாகும் !

***விளக்கம் :***

கற்பனையினால் உருவான இந்த மனம் நம்முடைய எண்ணத்தினால் எண்பத்து நான்கு லட்சம் ஜீவ கோடிகளாகவும், அதை சிருஷ்டிக்கும் ஈஸ்வரனாகவும், சிருஷ்டிக்கு மூலமாய் இருக்கின்ற ஜடகட படாதிகள் (ஜடம் - மண், மலைகள், கடம் - அனைத்து ஜீவகோடிகளின் சரீரம், படம் - மரம், செடி, கொடி, புல், பூண்டு) ஆகியவைகளையும் தாமே சிருஷ்டித்துக் கொண்டு அதில் வரும் விஷயங்களை **நான், எனது** என்று அபிமானித்து, புசித்து, ஜனனத்தையும், மரணத்தையும் தமக்குத் தாமே ஏற்படுத்திக் கொள்கிறது. கற்பனையின் மனதானது மோகத்தினால் (அதிக ஆசை) காமத்தையும், அந்த ஆசையின் காரணமாக புண்ணிய பாப கர்மாக்களையும் சுகமாகவும், துக்கமாகவும் தமக்குத் தாமே ஏற்படுத்திக் கொள்கிறது.



## மறந்த நிலையே இறந்த நிலை !

பாடல் : 5

நினைவின்றி நிற்பதுவே அகண்டமாகும்
நினைவின்றி நிற்பதுவே நிஷ்டையாகும்
நினைவின்றி நிற்பதுவே ஞானமாகும்
நினைவின்றி நிற்பதுவே மோக்ஷமாகும்
நினைவின்றி நிற்பதுவே ஸகஜமானால்
நினைவின்றி நிற்பதுவே நீயும் யாமும் ஆகும்
நினைவின்றி சும்மா இருப்பதுவே சிவமும் ஆகும்
நினைவணுவும் இல்லையெல்லாம் பிரம்மம்தானே !

**விளக்கம் :**

மனம் அனைத்து ஜீவ கோடிகளின் புண்ணிய பாப அசைவுகளை வினோதமாக கற்பனை பண்ணாமல் இருந்தால் அதுவே அகண்டமாகும். அதுவே பரிபூரண நிஷ்டையாகும். அதுவே சுத்தமான ஞானமாகும். அதுவே பிறவி அற்ற மோட்சமாகும். அந்த நிலை நமக்கு சகஜமாகவே (பயிற்சியும், முயற்சியும் இல்லாமல்) ஸ்ரீ குரு கிருபையாலும், ஸ்ரீ திரு அருளாலும் சாத்தியமானால் ஜீவனாகிய நாமும், பரமாகிய ஆத்மாவும் ஒன்றாக முடியும். எண்ணமில்லாமல், வார்த்தைகளைப் பேசாமல் அனைத்தையும் சாட்சியாக பார்த்துக் கொண்டிருக்கப் பழகினால் சுத்த சிவமாகிய அந்த பரம்பொருள் நாமே ஆகலாம். என்றும் இல்லாத மனதை இல்லை என்றே முடிவு செய்தால் ***அது நீயே ஆவாய்.***



## அறிவுருவே ஆன்மா !

பாடல் : 6

அறிவுருவாம் ஆன்மாவே இருப்பதாலே
அறைகின்ற ஆன்மா என்னுமோர் வாக்குமில்லை
அறிவுருவாம் ஆன்மாவே இருப்பதாலே
அன்னியமாய் அவித்தையில்லை மாயையில்லை
அறிவுருவாம் ஆன்மாவே இருப்பதாலே
அன்னியமாய் சங்கல்ப விகல்பமில்லை
அறிவுருவாம் ஆன்மாவே எங்கும் என்றும்
அசஞ்சலமாய் அமர்ந்ததென நிச்சயிப்பாய் !

***விளக்கம் :***

ஸ்ரீ சத்குருவே அறிவு சொரூபமாகும். ஸ்ரீ சத்சீடனே மனமாகும். அறிவு சொரூபமான ஆத்மாவே அனைத்துமாக இருப்பதால் வாக்கினால் சொல்லக்கூடிய தேவதெய்வம் என்றோ, ஆத்மா என்றோ, பரமாத்மா என்றோ, பரம் பொருள் என்றோ பிரித்துச் சொல்ல இடமில்லை. பரம் பொருள் என்றால் பரந்து விரிந்த சமூத்திரம். ஆத்மா என்றால் அதில் ஒரு திவலை (துளி). எங்கும் நிறைந்திருக்கின்ற **அறிவு சொரூபமே** சுத்த ஆத்மாவாக இருப்பதால் கலைகளாகிய வித்தை என்றும், அவற்றை மறைக்கும் மாயை திரை என்றும் புண்ணிய பாபங்களை கற்பனை செய்யும் எண்ணமும் இல்லை. அதை மறப்பதும் இல்லை. அறிவு சொரூபமாகிய அந்த ஆன்மாவே, கண்ணால் காண்பது, காதால் கேட்பது, மூக்கினால் நுகர்வது, வாயினால் சுவைப்பது, சரீரத்தை தொட்டு ஸ்பரிசிப்பது ஆகிய அனைத்திற்கும் கர்த்தா என உணர்ந்தால் இவ்வுலகில் விகாரம் (கோரம்) இல்லை. விகாரம் இல்லாததினால் விவகாரம் இல்லை. விவகாரம் அற்றுவிட்டால் அங்கு சாந்தி, அமைதிதான் கிட்டும். அப்படிப்பட்ட அறிவு சொரூபமாகிய ஆத்மாவே நாம் என உறுதிப்படுத்துவாயாக. இதைத்தான் வேதம் "***மௌனம் கலக நாஸ்தி***" எனக் கூறுகிறது.

## அந்தமாதி, சொந்தபந்தம் வந்தநிலை

பாடல் : 7

அந்தமிலாத் தன்மையினால் ஆதியில்லை
ஆதியிலாத் தன்மையினால் அந்தமில்லை
தொந்தமிலாத் தன்மையினால் தோற்றமில்லை
தோற்றமிலாத் தன்மையினால் தொந்தமில்லை
பந்தமிலாத் தன்மையினால் வீடும் இல்லை
பரவிய வீடில்லாத் தன்மையினால் பந்தமில்லை
சந்ததமும் சின்மயமாம் ஆன்மா ஒன்றே
சலியாத வஸ்துவென நிச்சயிப்பாய் !

**விளக்கம் :**

அந்த பரவஸ்துவுக்கு ஆதியும் இல்லை. அதாவது புதிய தோற்றமும் இல்லை. அந்தமும் இல்லை. அதற்கு முடிவோ, அழிவோ இல்லை. என்றும் பரிபூரணமாகவே இருக்கிறது. அந்த பரவஸ்துவிற்கு நாம ரூபகுணம் குறி என்ற எந்த விதமான விகார குணங்களும் இல்லை. தனக்கு சொந்தம் என சொல்லக்கூடியது எதுவும் இல்லை. அங்கு தோற்றம் இல்லை. தோற்றம் இல்லாத் தன்மையினால் சொந்தம் கொண்டாடும் பந்தமும் இல்லை. பந்தம் இல்லாத் தன்மையினால் (ஆசை இல்லாத் தன்மையினால்) சென்று அடையக்கூடிய மோட்சமும் இல்லை. மோட்சம் இல்லாத்தன்மையினால் பந்த நிவர்த்தி என்ற சாதன சாத்தியமும் இல்லை. காலாதீதமான அந்த ஒன்று, அசைவில்லாமல் சித் சொரூபமாகவும், ஆத்ம சொரூபமாகவும், பர சொரூபமாகவும் **தாம் தாமாகவே உள்ள நிரந்தர வஸ்துவென நிச்சயிப்பாய், அதுவே நாம்** என உறுதி கொள்.



## அனைத்தும் கற்பனையின் சொரூபமே !

பாடல் : 8

கருதியிடும் புராணம்பொய் இதிகாசம் பொய்
　　காரண காரியம் பொய் ஈசன் பொய்யே
பரவியிடும் உலகும் பொய் உயிர்களும் பொய்
　　பந்தமொடு மோக்ஷசுக துக்கமும் பொய்யே
சுராசுரர் எவரும் பொய் தியானம் பொய்யே
　　சுத்தமதாம் மனதும் பொய் வாக்கும் பொய்யே
இகபரமாம் கதியும் பொய் பயமும் பொய்யே
　　உணர்வுருவாம் பரப்பிரம்மம் ஒன்றே மெய்யாம் !

**விளக்கம் :**

நாம் பாடியும் கேட்டும் உண்மையென நம்பி இருக்கும் பதினெட்டு புராணங்களும், இரண்டு இதிகாசங்களும், அவைகளுடைய காரிய காரணமும் பொய் என்று உறுதி கொள். வேதமும், சாஸ்திரமும், ஆகம நூல்களும் பொய் என உறுதி கொள். நாம் செய்யும் யக்ஞ-ங்களும் (யாகம்), மந்திர தந்திர யோகானுஷ்டானம் அஷ்டமா சித்திகள் அனைத்தும் பொய் என உணர். வேதம் உணர்த்தும் ஈஸ்வராதிகளும் நரர், அசுரர், தேவர் அனைத்தும் பொய் என உணர். இவை அனைத்தையும் கற்பனா சொரூபமாக எண்ணும் மனதும் பொய். எண்ணியதை சொல்லும் வாக்கும் அதாவது வசனமும் பொய். இகமாகிய இவ்வுலகும், பரமாகிய தேவ தெய்வ உலகங்களும், பரத்திற்கு அப்பாலான மோட்ச லோகமும், அதை அடையக்கூடிய வழிமுறைகளும் சுத்தப்பொய் என உணர்வாய். தாம் தாமான, உணர்வு உருவான பரப்பிரம்மம் ஒன்றே உண்மை.



பாடல் : 9

புத்தியினால் உறுதியிடும் பொருளும் பொய்யே
புகல் மனதால் மனனமிடும் பொருளும் பொய்யே
சிந்தையினால் சிந்திக்கும் பொருளும் பொய்யே
செறிவாக்கால் வசனிக்கும் பொருளும் பொய்யே
இந்திரிய விஷயமதாம் பொருளும் பொய்யே
அது இது என காண்பிக்கும் பொருளும் பொய்யே
சொந்தமதாய் விரிவுற்ற பொருளும் பொய்யே
துகளற்ற பரப்பிரம்மம் ஒன்றே மெய்யாம் !

**விளக்கம் :**

நம்முடைய புத்தியின் சொரூபமான (கற்பனையினால் தோற்றும்) அனைத்தும் பொய்யே. நம்முடைய மனதினால் (எண்ண விருத்தியினால்) உண்மையென கருதும் அனைத்தும் பொய்யே. நம் எண்ணத்தினால் அதாவது சித்தத்தினால் சிந்திக்கக் கூடிய மனைவி, மக்கள், பொன், பொருள், ஜீவனாம்ச வியாபாரம் அனைத்தும் பொய்யே. நம்முடைய இந்திரியங்களாகிய ஞானேந்திரியம், கர்மேந்திரியம், அந்தக் கரணம் (மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்) இவைகளால் நான், என்னுடையது என்று புசிக்கும் அனைத்து விஷய (விஷம்) சுகங்களும் பொய் என உணர்வாய். துன்பமற்ற, கலக்கமற்ற, சந்தேகமற்ற அந்த பரப்பிரம்மம் ஒன்றே உண்மை. **அதுவே நாம்** எனவும் உணர்வாய்.



## ஜீவன் முக்தி நிலை

பாடல் : 10

எமக்கயலாய் ஜாதியில்லை நீதியில்லை
எமக்கயலாய் கோத்திரமும் குலமும் இல்லை
எமக்கயலாய் கர்மமில்லை அதன் பயனுமில்லை
எமக்கயலாய் காரிய காரணமும் இல்லை
எமக்கயலாய் வித்தையில்லை அவித்தையில்லை
எமக்கயலாய் தியானமில்லை சமாதியில்லை
எமக்கயலாய் நாதமில்லை ஸப்தமில்லை
யாம் பிரம்மம் என்றுணர்வோனே ஜீவன்முக்தன் !

**விளக்கம் :**

நமக்கு அயலாக ஜாதி, மதம், இனம், மொழி, சம்பிரதாயம், கோத்திரம், குலம், இவைகளை வர்ணிக்கக்கூடிய நீதி இல்லவே இல்லை. நாம் அன்றாடம் செய்யக்கூடி புண்ணிய பாப கர்மாக்களும் அதன் பயன்களும் இல்லவே இல்லை. அறுபத்து நான்கு கலைகளும் அந்த கலைகளின் பயிற்சியும், அந்த பயிற்சியை விட்டதனால் வரும் தோஷமும் இல்லவே இல்லை. நமக்கு அயலாக தியானம் இல்லை. சமாதி நிலை என்று சொல்லக் கூடிய சாதித்து பெறும் சாந்திநிலை இல்லை. காலாதீதமான அந்த பிரம்மம் ஒன்றே உண்மை என உணர்பவனே ஜீவன் முக்தன்.



பாடல் : 11

எமக்கயலாய் ஜபமும் இல்லை தபமும் இல்லை
எமக்கயலாய் மந்திர தந்திரமும் இல்லை
எமக்கயலாய் யோகமில்லை சாந்தியில்லை
எமக்கயலாய் இரவுமில்லை பகலுமில்லை
எமக்கயலாய் அயனுமில்லை அரியுமில்லை
எமக்கயலாய் அரனுமில்லை அவர் தொழிலுமில்லை
எமக்கயலாய் தேவ தெய்வங்கள் யாரும் இல்லை
யாம் பிரம்மம் என்றுணர்வோனே ஜீவன்முக்தன் !

**விளக்கம் :**

நமக்கயலாக ஜபதபமும், மந்திர தந்திரமும், யோக சாதனைகளும் இல்லை என உணர்வாய். நமக்கயலாக சூரிய, சந்திர, அக்னி இல்லாத்தன்மையினால் இரவும் இல்லை பகலும் இல்லை. நமக்கு அயலாக சிருஷ்டிக்கும் பிரம்மாவோ, காக்கும் ஹரியோ, அழிக்கும் ஹரனோ இம்மூவருடைய காரியங்களும் இல்லை என உணர்வாய். அனைத்து தேவ தெய்வங்களும் அவர்கள் தொழில்களும் இல்லை என உணர்வாய். சர்வ வியாபகமாக இருக்கும் அந்த பர சொரூபம் ஒன்றே உண்மை. **அதுவே நாம்** என்று உணர்கின்றவனே **ஜீவன்முக்தன்.**



பாடல் : 12

தன்னிடையே தானாக விளங்கா நின்ற
தற்பதமாம் பரப்பிரம்மம் தாமே என்று
**பின்னமிலா அறிவுற்று** பிரம்மாகாரம்
பெற்றவனே பிணைப்பற்ற ஜீவன் முக்தன்
அன்னியமே இல்லாத ஆன்மாவின் கண்
அமர்ந்தங்கே ரசிப்போனாய் அகண்டமான
**தன்னிடையே தானாக தனித்து நின்று**
தன்னிலின்பம் புசிப்பவனே ஜீவன் முக்தன் !

***விளக்கம் :***

அந்த பரசொரூபம் வெளியே தனித்து இல்லாத் தன்மையினாலும் நமக்குள்ளே நாமாக இருக்கின்ற தன்மையினாலும், நம்முடைய தீர்க்கமான அறிவு சொரூபமாக இருப்பதாலும், ***அதுவே நாம், நாமே அது*** என்ற ஓர்மித்த தன்மையினாலும், நமக்கு அன்னியமே இல்லாமல் அனைத்து அண்ட பிண்ட சராசரங்களிலும் அந்த ஒன்றையே அனுபவித்து அதிலேயே ரமித்து (கலந்தவனாய்) அகண்டைக ரசமான (பிரம்மானந்த சமுத்திரமாய்) தம் சுகத்தையே தாம் அனுபவிப்பவனாய் சுகானுபவம் பெற்றவனே **ஜீவன் முக்தன்.**



## விதேகமுக்தி நிலை !

பாடல் : 13

பூதமுதல் பலவிதமாம் **காலபேதம்**
பொய்யான வெகுவிதமாம் **தேசபேதம்**
ஓதியிடும் பலவான **வஸ்து பேதம்**
ஒன்றுமிலாது இருப்போனே விதேகமுக்தன்
நீ நான் அவன் இவன் என்ற தேகாதி
எந்தவித பேதமுமோர் அணுவுமின்றி
போதகனப் பரப்பிரம்ம வடிவேயாகி
பொருந்தியிருந் திடுவோனே விதேகமுக்தன் !

***விளக்கம் :***

பஞ்ச பூதங்களால் ஆன உலகமும், இந்த உடலும் அது தோன்றியதற்கான காலபேதமும், தேச பேதமும், அந்தந்த தேசங்களில் காணக்கூடிய, சொல்லி உணர்த்தக்கூடிய வர்த்தமான (கொடுக்கல், வாங்கல் பண்ணக்கூடிய வியாபாரம்) வஸ்துக்களும், அது சம்பந்தமான எந்த எண்ணமும், எந்த வார்த்தையும் இல்லாமல் நீ, நான், அவன், அவள், இவன், இவள் என்று தேகங்களை சுட்டிக் காட்டக்கூடிய எந்த பேதமும் அணுவும் இல்லாமல் பர போதத்தை உணர்த்தக்கூடிய அந்த பரப்பிரம்ம வடிவமே தாம் தாமாகி பொருந்தி இருப்பவனே விதேகமுக்தன்.



பாடல் : 14

ஜீவனென்றும் ஈசனென்றும் ஜகத்தீதென்றும்
செப்பியிடும் சுருதியென்றும் ஸ்மிருதியென்றும்
பாவனமாம் புராண இதிகாசமென்றும்
பலவித ஆகம நூல்களென்றும்
மேவும் பொருள் சகலமுமே பிரம்மம் என்றும்
அப்பிரம்மம் நாம் என்றும் அயலன் றென்றும்
பாவனையீது ஒன்றுமிலாதென்றும் சுத்தமான
பரமாக இருப்பவனே விதேக முக்தன் !

***விளக்கம் :***

எண்பத்து நான்கு இலட்சம் ஜீவ கோடிகள் என்றும் அதாவது நடப்பன, ஊர்வன, பறப்பன, நீந்துவன முதலிய ஜீவ கோடிகள் என்றும், அவைகள் வசிக்கும் ஜகத்தென்றும், அவைகளை சிருஷ்டிக்கும் கர்த்தா என்றும், அந்த கர்த்தாக்களை புகழும் வேத வாக்கியங்கள் என்றும், சாஸ்திராதி நியமனங்கள் என்றும், அதை உணர்த்தும் நூல்களென்றும், ஆகிய இவை அனைத்தும் சுக சொரூபமான பிரம்மம் என்றும், அதுவே நாம் என்றும், நமக்கு அயலாக எதுவுமே இல்லை என்றும் பாவனை எதுவும் இல்லாமல் பாவனாதீதமாக இருப்பவனே விதேகமுக்தன்.



பாடல் : 15

பலவிதமாய் தோற்றயவோர் நினைவுமின்றி
பரவுகுண விகாரங்கள் எவையுமின்றி
இலங்கும் சுயஞ்ஜோதியதாம் பரமேயாகி
இருளறவே இருந்திடுவோன் விதேகமுக்தன்
அலையும் மனோவிருத்திகளோர் அணுவுமின்றி
விதம் விதமாம் காரியங்கள் அனைத்துமின்றி
சலனமிலாப் பரப்பிரம்மம் தாமேயாகி
சலியாமல் இருப்பவனே விதேக முக்தன் !

***விளக்கம் :***

பலவித கற்பனா சொரூபமாக தோன்றியதில் எந்த நினைவும் இல்லாமல் அதன் குண தோஷங்கள், விகார விவகாரம் எதுவும் இன்றி தாம் தாமாக இலங்கும் சுயம் ஜோதியாய் இருக்கும் பரமேயாகி அக்ஞான இருள் அணுவளவும் பற்றாதவனாகி அந்த இருள் சம்பந்தமான சர்வசதாவும் அசைக்கும் மனோ விருத்திகள், அதன் காரிய காரணங்கள் எதுவும் இல்லாமல் அசைவற்ற, களங்கமற்ற, கலக்கமற்ற அந்த பர சொரூபமே தாம் தாமாகி சலியாமல் இருப்பவனே விதேகமுக்தன்.



பாடல் : 16

பிரம்மானந்தம் தன்னிலே சரீராதியுற்று
பிரம்மானந்தம் தன்னிலே குடும்பம் பெற்று
பிரம்மானந்தத்தையே அர்ச்சனை யுற்றோனாகி
பிரம்மானந்தத்தையே ஜயம் பெற்றோனாகி
பிரம்மானந்தம் தனிலே திருப்தனாகி
பிரம்மானந்தம் தனிலே உன்மத்தனாகி
பிரம்மானந்தமதே தாம் தாமாகி நின்றோன்
பின்னமிலாப் பரமான விதேக முக்தன் !

**விளக்கம் :**

எந்த வினாடியும் அந்த பிரம்மானந்தத்திலேயே தம் சரீரத்தை இயக்குபவனாய், அந்த பிரம்மானந்தத்தையே கணவன், மனைவி, குழந்தை, உற்றார், உறவினர் ஆகிய இந்த குடும்பமாக அனுபவித்துக் கொண்டும், அந்த பிரம்மானந்தத்தையே சர்வ சதா உணர்ந்து பேசப்பட்டவனாய், அந்த பிரம்மானந்தத்தையே சிரவண, மனன, நிதித்யாசனம் அதாவது கேட்டல்,தெளிதல், சிந்தித்தல் ஆகியவற்றில் வெற்றி பெற்றவனாய், அந்த பிரம்மானந்தத்தையே சுவைத்து சுவைத்து திருப்தி அடைந்தவனாய், அந்த பிரம்மானந்தத்தையே தமக்கு தாமே உணர்ந்து ஓர் பைத்தியமாய், அந்த பிரம்மானந்தமே தாமாகி தனித்து நின்று உடல் உலக பிணைப்புகள் எதுவுமின்றி அந்த பர சொரூபமாக இருப்பவனே விதேகமுக்தன்.



## ஜகத் ஜீவ ஈஸ்வராதிகளும் கற்பனையே !

பாடல் : 17

மாயையிலாத் தன்மையாலே மாயோபாதி
மருவியிடும் ஈசனுடைய வகுப்பே இல்லை
ஆயபல அவித்தையிலாத் தன்மையாலே
அவை மருவும் ஜீவருடைய வகுப்பும் இல்லை
தூய அயன் இலாமையினால் சிருஷ்டி இல்லை
துலங்கும் அரி இலாமையினால் ஸ்திதியுமில்லை
நேய அரன் இலாமையினால் நாசமில்லை
நிகிலமுமே நிறைந்த பரப் பிரம்ம ரூபம் !

***விளக்கம் :***

ஈஸ்வராதிகளுக்கு மாயை ஓர் விளையாட்டு, ஜீவர்களுக்கு அந்த மாயையினால் தோன்றிய ஜகமும், ஜகத்தின் பொருள்களும் ஓர் பந்தம். அதாவது ஈசன் சிலந்திப் பூச்சி போன்று தன்னுடைய மாயையை தன் கையில் வைத்துக் கொண்டு ஜகத்தையும், ஜகத்தின் பொருள்களையும் உண்டாக்கி காத்து பின்பு அதை அழிக்கின்றான். அந்த மாயையை தன் கைவசம் கொண்ட தன்மையினால் ஈசனை அது பந்தப்படுத்துவது இல்லை.

ஆனால் ஜீவனாகிய நாம் ***நான், என்னுடையது*** என்ற அபிமான அஹங்கார பாவனையினால் பட்டுப்பூச்சி போன்று நம் மேலேயே நூலை சுற்றிக் கொண்டு மோகத்தாலும், கோபத்தாலும் ஜனன மரண சாகரத்தில் திரும்ப திரும்ப பிறந்து இறக்கின்றோம். தன்னை அறிந்த ஓர் பக்குவ ஆன்மா தெய்வ அனுக்கிரஹத்தினாலும், ஸ்ரீ சத்குரு கிருபையினாலும், ஈசனுடைய மாயா சொரூபத்தை உணர்ந்து அவித்தையாகிய உலகையும், உலக காட்சிகளையும் புரிந்து விலகிக் கொள்கிறான். அந்த பக்குவ ஆன்மாவிடம் ஈசனின் மாயை பயனற்று போய்விடுகிறது. பயனற்ற தன்மையினால் இந்த பக்குவ ஆன்மாக்களுக்கு மோகம், கோபம், பயம் இல்லாத் தன்மையினால்

அந்த ஈசனுடைய அவதார சொரூபங்களையும், அவருடைய மாய உபாதிகளையும் மறந்து எந்த வினாடியும் ஆனந்தமாகவே இருக்க முடிகிறது. அப்படி மாயை பயனற்று போய்விட்ட தன்மையினால் தேவ தெய்வங்களுடைய வம்ச விருத்தி கதைகள் அனைத்தும் பொய்யாகி விடுகிறது.

இந்த பக்குவ ஆன்மாவுக்கு அவித்தையை விட்ட தன்மையினால் ஜன்ம ஜன்மாந்திர தோஷமும், பிறவியினால் வந்த குற்றமும், ஜீவ சந்ததி வகுப்புகளும் பொய்யாகி விடுகிறது. இந்த பக்குவ ஆன்மாக்களின் உண்மை உணர்வு ஜகத்ஜீவ ஈஸ்வராதிகளின் சொரூபத்தையே இல்லாமல் பண்ணிவிடுகிறது. அத்தன்மையினால் சிருஷ்டிக்கும் பிரம்மாவும் இல்லை. இரட்சிக்கும் ஹரியும் இல்லை. அழிக்கும் சிவனும் இல்லை. எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் அந்த பரப்பிரம்மம் ஒன்றே நிலைத்த வஸ்து என உணர்வாய்.



பாடல் : 18

பூசனைசெய் தெய்வமிலாத் தன்மையாலே
　　பூஜையில்லை பூஜிப்போர் தாமும் இல்லை
மோசகமாம் தெய்வமிலாத் தன்மையாலே
　　மோக்ஷமில்லை முமுக்ஷுயுளோர் தாமுமில்லை
பேசும் ஒரு திருஸ்யமும் இலாமையாலே
　　பிறங்கியிடும் திருக்குமொருகாலும் இல்லை
மாசணுவு மருவாத அறிவேயாக
　　மன்னியிடும் பரப்பிரம்மம் தாமே எல்லாம் !

**விளக்கம் :**

ஈஸ்வராதிகளும், அதன் தோற்றமும் உணர்வுப்பூர்வமாக இல்லாத தன்மையினால் அங்கு பூஜையோ, அபிஷேக ஆராதனைகளோ செய்ய இடமில்லை. அப்படி பூஜை செய்யும் ஜீவர்களும் அதன் சந்ததிகளும் அங்கே இல்லை. மோட்சத்தை கொடுக்கக் கூடிய (பதமுக்தி) தெய்வம் இல்லாத தன்மையினால் சென்று அடையும் மோட்சமும் இல்லை. அங்கு செல்கின்ற முமுட்சுகளும் அதாவது ஜீவன்முக்தர்களும் அங்கு இல்லை. வாக்கினால் கற்பனை செய்து பேசக்கூடிய விஷய அனுபவ பொருள்களும் இல்லாமையினால் அதற்கு அதிஷ்டானமான மூலப் பொருளும் இல்லை. குற்றமற்ற, அறிவு சொரூபமான, ஆனந்தமயமான அந்த பரப்பிரம்மம் ஒன்றே உள்ளது என உணர்வாய்.



## அஹம் பிரம்மம் பாவனை செய்யச் செய்ய

பாடல் : 19

நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது துவிதமெல்லாம் இழந்ததாகும்
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது அத்வைதம் அடைந்ததாகும்
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது ஜீவத்வம் இறந்ததாகும்
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
நின்மனது நிறைந்த பரப்பிரம்மமாமே !

**விளக்கம் :**

ஓர் பக்குவ ஆன்மா **அஹம் பிரம்மம், பிரம்மம் அஹம்** என்ற உறுதியினால் ஆத்மபாவனை ஸர்வ ஸதாவும் செய்யச்செய்ய, துவைதமான ஜகத்தோற்றம் அழிந்துவிடும். அந்த நிச்சயம் உறுதியாக, உறுதியாக சுத்த அத்வைதம் அடைந்த நிலையாகும். அந்த நிச்சயம் ஸ்திரப்படும் போது நாம் ஜீவன் என்ற ஜீவத்வம் இறந்துவிடும். இந்த நிச்சயம் நமக்கு சாசுவதமானால் எந்த வினாடியும் ஆனந்த பிரம்மமாகவே நாம் இருப்பதை உணரலாம்.



பாடல் : 20

நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
　　நின்மனது நினைவனைத்தும் மறந்ததாகும்
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
　　நின்மனது அபயபதம் செறிந்ததாகும்
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
　　நின்மனது பயமெல்லாம் இறந்ததாகும்
நிச்சயமே திடமாகச் செய்யச் செய்ய
　　நின்மனது நிஜவடிவில் நிலைத்து நிற்கும் !

**விளக்கம் :**

அந்த நிச்சயம் நமக்கு உறுதியாகிவிட்டால் ஜகத்ஜீவ ஈஸ்வராதிகளையும் மறந்த நிலையாகும். அந்த நிச்சயமே நமக்கு சாசுவதமானால் பயமற்ற அபயபதம் கிடைத்த நிலையாகும். அந்த நிச்சயம் உறுதியானால் சம்சார பயமோ, மரண பயமோ இல்லாத நிலை பெறலாம். அந்த நிச்சயமே உறுதியானால் நம் யதார்த்த சொரூபமாகிய அந்த பிரம்மத்தில் நிலைத்து நிற்கக்கூடிய ஆனந்த நிலை பெறலாம்.



## மனமதுவே மஹத்தானால்

பாடல் : 21

மனததுதான் நின்ஸஹஜ சொரூபமானால்
மற்றதுதான் மீளாது மாண்டுபோகும்
மனதுடைய மீளாத மாய்வு தானே
மஹத்தான மோக்ஷநிலை அதனால் மைந்தா
மனததனை மீளாது மாய்க்க வேண்டி
மஹத்தான பரப்பிரம்ம நிச்சயத்தை
**மனதொருமையுடன் செய்து மனதை மாய்த்து**
மஹத்தான முக்திநிலை மேவுவாயே !

***விளக்கம் :***

நம்முடைய மனமே அனைத்திற்கும் காரணமாக இருக்கிறது. (அதாவது பந்தத்திற்கும் மனமே, பந்த நிவர்த்திக்கும் மனமே, மோக்ஷ சுகத்தை அனுபவிப்பதும் மனமே). இந்த மனமானது தன் யதார்த்த சொரூபமாய் இருக்கப்பட்ட பிரம்மானந்தத்தில் லயித்துவிட்டால் ஜனன மரண ஸம்ஸார துக்கம் இல்லாமல் போய்விடும். இது மனதினுடைய அழிவாகும். அதாவது மனம் மஹத்தான தன்மையாகும். இந்த மஹத்தான தன்மையை இந்த மனம் சகஜமாகவே அனுபவித்துவிட்டால் அதுவே மோக்ஷமாகும். இந்த மனதை அழிக்க வேண்டி அதாவது மஹத்தாக்க வேண்டி "***அஹம் பிரம்மம், பிரம்மம் அஹம்***". (அதுவே நாம், நாமே அது) என்ற நிச்சயத்தை, ஓர்மையான தீர்க்கமான பரபாவனையினால் செய்து மனதை மாய்த்து மோக்ஷத்தை அடைவாயாக.



## மனதை மஹத்தாக்கும் வழி

**பாடல் : 22**

அகண்டபர பிரம்மத்திற்கு இங்கயலே இல்லை
அகிலமுமே அகண்டபர பிரம்மம் என்றும்
அவ்வகண்டபர பிரம்மம் **நாமே என்றும்**
நாமே அவ்வகண்டபர பிரம்மம் என்றும்
அகண்டபர பாவனையே திடமாய் செய்து
அயலணுவும் தோன்றாது அழிந்த பின்பு
அவ்வகண்டபர பாவனையும் செய்யாது தள்ளி
ஆனந்த வடிவாக அமர்ந்திருப்பாய் !

***விளக்கம் :***

அகண்டமான அந்த பரப்பிரம்மத்திற்கு அயலாக வேறு எதுவும் இல்லை. அண்ட பிண்ட சராசரங்களும், அனைத்து ஜீவ கோடிகளும் நம்முடைய ஆத்ம சொரூபம் என்றும், அதுவே பர சொரூபம் என்றும், நாமே அது என்றும், அந்த அகண்ட பரபாவனையை திடமாக செய்தால் நமக்கு அன்னியமில்லாமல் போய்விடும். அதாவது அறியாமை அழிந்த தன்மையினால் நாம் ஆனந்தமாக இருக்கலாம்.



பாடல் : 23

உன்னிய அவ் வானந்த வடிவும் தள்ளி
உரமாக **ஒரு வடிவே** ஆகி நிற்பாய்
அன்னியமிலா ஒருவடிவென்பதையும் தள்ளி
அதன்பின்பு நிர்க்குணமே ஆகி நிற்பாய்
மன்னிய அந்நிர்க் குணம் என்பதையும் தள்ளி
மனவாக்குக்கு எட்டாத வடிவாய் நிற்பாய்
அன்னதையும் தள்ளியபின் **அறிவு மாத்திரமாகி**
யாவையுமே இழந்த தன் மாத்திரமாவாய் !

***விளக்கம் :***

மேலே சொன்ன அந்த ஆனந்த வடிவம் நாம் என்ற பாவனையையும் தள்ளி, அனைத்தும் ஒன்றே என்ற நிர்குண சொரூபமாக நிற்பாய். அந்த நிர்குணத்தையும் அதாவது குணாதீத நிலையில் மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத சுத்த அறிவு மாத்திரமாக அதாவது சுத்த சைதன்ய சொரூபமாக தற்பிரம்ம (தாம் தாமான நிலை) சொரூபத்தில் நிலைத்து நிற்பாய்.



பாடல் : 24

நிற்பதென்னும் தன்மையுமே இழந்த பின்னர்
நீ நீயாய் இருக்கின்ற சுபாவம் தன்னை
சொற்பமுமே வாக்காலும் மனத்தினாலும்
செல்லவொண்ணாது எண்ணவொண்ணாது ஆதலாலே
தற்பரமாம் **ஸஹஜ நிலை** சார்ந்த பின்னர்
தான் தானே தானாகத் தனித்திருப்பாய்
அற்பமுமே விகற்பமிலா அவ்விருப்பை
அறைந்திடவும் நினைந்திடவும் யார்தாம் வல்லோர்.

***விளக்கம் :***

நாம் இவ்விதமாக இருக்கிறோம் என்ற பாவனையையும் தள்ளி, நாம் நாமாக இருக்கின்ற அந்த சுக சொரூப நிலையை சொல்லவும் முடியாது. விளக்கவும் முடியாது. அந்த ஸகஜானந்த நிலையை பெற்றபின் அதை இன்னதென உணர முடியாது. அதாவது ஹரிஹர பிரம்மாக்களோ அதை உணரவும் முடியாது. விளக்கவும் முடியாது.



## அவிசாரம் அற்ற நிலை

பாடல் : 25

மனததுதான் அவிசார தசையில் மைந்தா
மயக்கமுறும் ஜகம்முதலாய் தோற்றினாலும்
மனதுருவை மாறாது விசாரம் செய்தால்
மனததுதான் மஹத்தான சித்தேயாகும்
மனததனை எளிதாக ஜெயித்தெப்போதும்
மஹத்தான சித்துருவே ஆக வேண்டி
மனதுமுதல் எல்லாம்சித்தே அது நாம் என்றே
மாறாது சிந்தித்து சாந்தனாவாய் !

***விளக்கம் :***

குழந்தாய் ! இந்த மனமானது உடல் உலக பாவனையில் லயித்திருக்கும் பொழுது மனதின் கற்பனையாக இந்த ஜகம் இருப்பதென தோன்றினாலும், உண்மை விசாரணையின் தன்மையினால் சலிக்கின்ற இந்த மனம் மஹத்தான சித்சொரூபமாகவே இருக்கும். உஷ்ணம் அக்னியை நீங்காதது போல தாழ்வான செயல்களை செய்கின்ற இந்த மனம் விகார விவகார நிலையில் இந்த ஜகத்தை தோற்றிக் கொண்டு இருக்கும். அப்படி இந்த உடல் உலக விவகாரத்தினால் பந்தப்பட்ட இந்த மனதை எந்த வினாடியும் **நாமே அது, அதுவே நாம்** என்றஉறுதியான பாவனையை பண்ணி, அந்த ஒன்றை அன்றி அன்னியமில்லை. அதுவே நாம் என்று உறுதியான நிலையில் நின்று சாந்த சொரூபமாவாய்.



பாடல் : 26

அனக அறிவான பரப் பிரம்மம் தானே
அவித்தையினால் அசைவுற்று மனதாய் தோற்றும்
வினவும் அறிவான பரப்பிரம்மம் தானே
வித்தையினால் அசைவறுமேல் பரமேயாகும்
மனததுவும் சலனமுடன் இருக்குமாகில்
மஹத்தான ஜீவபர ஜகமாய் தோன்றும்
மனததுவே சலனமிலாது இருக்குமாகில்
மாசற்ற அறிவான பரமேயாகும் !

***விளக்கம் :***

சைதன்ய சொரூபமான, சுக சொரூபமான அந்த பிரம்மம் அவித்யா வாசனையினால், அதாவது அஞ்ஞானத்தினால், அசைவுற்ற தன்மையினால் மனம் என தோன்றும். மரத்தை அசைக்கின்ற காற்று போல இந்த மனம் அசைந்த தன்மையினால் உடல், உலகம் தோற்றிக் கொண்டே இருக்கும். ஜலத்தில் உப்பு கரைவது போல அந்த ஒன்றில் நாம் நிலைத்துவிட்டால் அசைவில்லாத, குற்றமற்ற அந்த பர சொரூபம் நாமே ஆக முடியும். மனம் அசைந்தால் அதாவது ஆசை, கோபம், பயம், துக்கம் இவைகளில் ஆழ்ந்துவிட்டால் இந்த ஜகம் தோற்றிக் கொண்டே இருக்கும். இந்த மனமே அசைவு இல்லாமல், **அது நாம், நாம் அது** என்ற பர பாவனையில் லயித்துவிட்டால், அந்த பரம் பொருளே நாம் ஆக முடியும்.



பாடல் : 27

ஆதலினால் அறிவுற்ற மனதேகாதி
அகிலமுமே அறிவான **பிரம்மம்** என்றும்
பேதமிலா அப்பிரம்மம் நாமே என்றும்
பிரிவறவே எப்போதும் சிந்தை செய்து
சாதகமாம் சிந்தனையால் மனதை வென்று
சலமனதின் சலனமெல்லாம் தவிர்ந்த பின்னர்
ஓதிய அச்சிந்தனையும் ஒழிந்தெப்போதும்
உணர்வுருவாம் பரமாகிச் சாந்தனாவாய் !

***விளக்கம் :***

ஆசையினால் இந்த மனதும், மனதின் கற்பனையான தேகம் அனைத்தும், அது சம்பந்தமான உலகமும், அறிவு சொரூபமான பிரம்மம் என்றும், பேதமில்லாத, அசைவற்ற அந்த பிரம்மம் நாமே என்றும், பிரிக்க முடியாத ஐக்கிய பாவனையை ஸர்வஸதாவும் சிந்தித்து, சிந்தித்து கற்பனை மனதை வென்று, அந்த ஆத்ம ஸ்வரூபத்தில் உணர்வுருவாக பரமாகவே சார்ந்து சாந்த சொரூபனாவாய்.



பாடல் : 28

தீங்கான சித்தம் முதல் எவையுமில்லை
திருசியமாய்த் தெரிகின்ற ஜகமும் இல்லை
ஆங்காரம் முதலியதோர் அணுவுமில்லை
அகிலமுமே அகண்டபர பிரம்மமேயாம்
நீங்காமல் எங்குமோர் நிறைவாய் நின்ற
நிமல அறிவான பரம் நாமே என்று
தூங்காது தூங்கும் நிலை கிட்டும் மட்டும்
தொடர்பாக சிந்தித்து சாந்தனாவாய்

***விளக்கம் :***

குழந்தைகளே ! நமக்கு தீங்கு செய்யத்தக்க சித்தம் எதுவும் இல்லவே இல்லை. சிந்திக்கத்தக்க சித்தமானது எந்த வினாடியும் பர சொரூபமென்றும், சித் சொரூபமென்றும், நாம் வணங்கும் தெய்வங்கள் என்றும், அவைகளால் அனைத்தும் நடைபெறுகிறது என்றும் முழுமையான உறுதி செய்தால் சித்தம் சிதறாது. எந்த வினாடியும் சிவ சொரூபமாகவே இருக்கும். சித்தம் சின்மயமான சிவமானால் நானாவிதரூபமான நாமரூப குணத்தோடு கூடிய இந்த ஜகம் இல்லவே இல்லை. அப்படி இந்த ஜகம் தோன்றாத தன்மையினால் அவைகளை **நான், என்னுடையது** என்று அபிமானித்து அஹங்கரிக்கும் மனம், புத்தி முதலியவும் அணுவளவும் இல்லை. அஹங்காரம் இல்லாத தன்மையினால் சராசரம் அனைத்தும் பர சொரூபமாகிய பிரம்மமே ஆகிவிடுகிறது. இந்த எண்ணத்தை தைலதாரை போல் சிந்தித்துக் கொண்டிருந்தால் காட்சிகளில் வீழ்ச்சியும், கேள்விகளில் கலக்கமும் கண்டிப்பாக இராது. அங்கு ***அனைத்தும் ஒன்றே, அது சுத்த சிவமே, அது நாமே*** என்ற பூரணத்துவம் பெற்று அரிதுயில் (அதாவது அறிவு சொரூபமான உறக்கம் - தூங்காது தூங்கும் நிலை) சகஜமாகவே பெற்று சாந்த சொரூபமாக ஆவாய்.

## பலகோடி ஜன்ம சுகிர்தம்

பாடல் : 29

அனந்தவித ஜென்மத்தில் அனுஷ்டிப்புற்ற
அறங்களெல்லாம் பரிபாகமானவர்க்கே
கனந்தரும் இப்பரப்பிரம்ம ஞானம் சற்றும்
கலங்காத மனதிடையில் எளிதாய்த்தோன்றும்
தினந்தினமும் தவறாமல் இச் ஜென்மத்தில்
திடமாக பரஞான அப்யாசத்தை
மனந்தனினால் செய்வோருக்கே மனதின் சுத்தி
மருவியபின் பரஞானம் மனதில் தோன்றும் !

**விளக்கம் :**

நாம் அறியாமையினால் பல கோடி ஜன்மம் எடுத்ததில், உண்மையின் நிலையில் பெற்ற புண்ணியமும், தர்மமும் இந்த ஜன்மாவில் நமக்கு கிடைத்திருக்கிறது. அப்படி அறங்களான பூர்வ புண்ணியம் சித்தித்த தன்மையினால் களங்கமற்ற பிரம்ம ஞானம் நமக்கு தோற்றுகிறது. தேவ தெய்வ கிருபையினாலும், குருதேவருடைய ஆசியினாலும் கிடைத்த இந்த பொக்கிஷமான ஆத்ம ஞானத்தை, உறுதியான மனநிலையுடன் அப்யாசம் பண்ணிக்கொண்டு வந்தால் சித்தசுத்தி ஏற்பட்டு மனம் மஹத்தாகி இந்த பிரம்ம ஞானம் மனதில் நிலைத்து நிற்கும்.



## மனோ முயற்சி

பாடல் : 30

> தனதுமனோ முயற்சியினால் பிரம்மாப்யாசம்
> தவறாது செய்து மனோ ஜெயம் பெற்றோர்க்கே
> அனயபர உணர்வு எளிதாய் உதிக்குமன்றி
> அன்னியர்க்கு எளிதாக உதிக்காதென்றும்
> சொன்ன உணர்வு சுகம் நல்கும் துயரைத் தீர்க்கும்
> சுபத்திற்கும் சுபமாக்கும் சுலபமாகும்
> ஜனனமுதல் விகாரமெல்லாம் தவிர்த்துத் தன்னை
> சத்தியசிற் சுககனமாம் பரமே ஆக்கும் !

**விளக்கம் :**

நம்முடைய முழுமையான மனோமுயற்சியினால் (எல்லாம் நீ, உன்னையல்லால் வேறு கதியில்லை என்று முழுமையாக சர்வார்ப்பணம் செய்த தன்மையினால்) பிரம்மாப்யாசம் சர்வசதாவும் உணர்வு பூர்வமாக இருப்பின் நமக்கு அது தாம்தாமாகவே உதிக்கும். புற உணர்வு மறையும். அப்படிப்பட்ட அக உணர்வோடு கூடிய பக்குவ ஆன்மாக்களுக்குத்தான் இந்நிலை கூடுமன்றி **கண்டதே காட்சி, கொண்டதே கோலம்** என புறஉணர்வு உள்ளாருக்கு இந்த ஆத்ம ஞானம் சித்திப்பதில்லை. இந்த அக உணர்வு அதாவது பூரண ஞானம் நமக்கு இயல்பாகவே சித்தித்துவிட்டால், அதுவே உண்மையான சுகத்தை கொடுக்கும் (உடல், உலக இனிமை மறையும்). அந்த சுகம் சுலபமாக சித்திக்கும். அந்த சுகம் ஜனன மரண விகார விவகாரம் எல்லாம் நீக்கி தம்மை சத்சித் ஆனந்த சொரூபமான பிரம்மம் ஆக்கிவிடும்.



பாடல் : 31

பரவடிவாய் பவமின்றி இருப்போருக்கே
பகைமனதால் பவபீதி தோன்றலாலே
திருசியமாம் மனதுமுதல் யாவும் என்றும்
திருக்கான பிரம்மம் என்றும் அது நாம் என்றும்
கருதும் பர பாவனையால் மனதை வென்று
கலங்காமல் இருப்போர்க்கே பரஞானத் தான்
மருள் உருவாம் பவபீதி நீங்குமன்றி
மற்றோர்க்கிப் பவபீதி நீங்காது என்றும் !

**விளக்கம் :**

அனேக சாதகர்கள் குற்ற உணர்வு இன்றி அபிமான அஹங்காரத்தை விட்டவர்களே. தேவ தெய்வங்களின் நாம ரூபத்தோடு கூடி அவர்கள் இருக்கும் கைலாயம், வைகுண்டம், மணிக்ரீவம், சத்தியலோகம், பிரம்மலோகம், சொர்க்காதிபத்யம் முதலிய லோகாந்திர பிராப்தியை நம்பி தம் மனதை ஆக்கிக்கொண்டால் இந்த மனம் பய பீதியை ஒரு காலும் விடாது. காரணம் ஜனன, மரண துன்பத்திலிருந்து மீள முடியாது. ஆகவே, உண்மையான பக்குவ ஆன்மா மனதினால் சிந்தித்தும், கற்பனா சொரூபத்தின் நாமரூபத்தில் மயங்காமல் கண்ணில் காணக்கூடிய அனைத்திலும் சத்தியமான பிரம்மமே இருக்கிறது ; அது வேறு எங்கும் இல்லை. நாமாகவே இருக்கிறோம் என்ற உண்மையின் தெளிவு நிச்சயத்தினால் சலிக்கின்ற மனதைவென்று கலங்காமல் பயமற்று இருப்பவர்க்கே இந்த பிரம்ம ஞானம் சகஜமாகவே சித்திக்கும். அங்கு கால பயமோ, தேச விகாரங்களோ, பொருள்களின் பாசபிணைப்புகளோ உண்மையில் இராது. நாம் அதுவாகவே இருக்க முடியும்.



பாடல் : 32

ஆதலினால் மனதுடைய விகாரமான
அகிலமுமே சலவுணர்வாம் மனதே யென்று
மோதுமனம் ஒருகாலும் சலனமில்லா
உணர்வுருவாம் பரமென்றும் அதுநாம் என்றும்
பேதமில்லாப் பாவனையால் மனதை வென்று
பின்னமிலாப் பரப்பிரம்ம ஞானம் பெற்றே
ஏதமிகும் பவபீதி அனைத்தும் விடுத்தெப்போதும்
ஏகபர வடிவாகி இருப்பாய் மைந்தா !

***விளக்கம் :***

ஆகையினால் இந்த கள்ள மனதுடைய விகார விவகாரமான உலகம் அனைத்தையும் கற்பனையின் - மனதின் சொரூபமே என்றும், சலிக்கின்ற அந்த மனதிற்கு இடம் கொடாமல் சலனமற்ற அகஉணர்வு சொரூபமான அந்த பரம் நாம் என்றும், பேதமில்லாத ஆத்ம ஞான பாவனையினால் ஜக உணர்வே தோன்றாவண்ணம் பின்னம் பிணைப்பு இல்லாத அந்த பிரம்மஞானம் மனதில் பெற்று அனைத்து பவபீதிகளையும் விடுத்து எந்த வினாடியும் ஏகபர வடிவாக இருப்பாய்.



## ஒன்றுபடு

பாடல் : 33

பிரம்மமஹம் அஹம்பிரம்மம் பிரம்மமேயெல்லாம்
பிரம்மமலாது அயலணுவும் இல்லை யென்றே
உரமருவும் உணர்வுதனை உருவோரெல்லாம்
உணர்வுருவாம் பிரம்மமதே ஆவரன்றி
ஒருபொழுதும் அயலாகார் உண்மை சொன்னோம்
உரைத்ததிலோர் ஐயமில்லை சத்தியம் தான்
சர்வபரி பூரணமாம் சிவம் தன்னாணை
சத்தியமே ! சத்தியமே !! சங்கையில்லை

***விளக்கம் :***

குழந்தாய் ! ***பிரம்மம் அஹம், அஹம் பிரம்மம் (அதுவே நாம், நாமே அது)***. பிரம்மமே அகில புவனமும் அனைத்து ஜீவ கோடிகளும். அந்த பிரம்மமல்லாது அயலாக ஒரு பொருளும் இல்லை என்ற உறுதியான நிச்சயத்தை பெற்றவர்கள் எல்லாம் அக உணர்வு சொரூபமான அந்த பிரம்மமே ஆவாரன்றி உடல் உலக உணர்ச்சிகளுக்கு ஒருகாலும் ஆளாகமாட்டார். தனக்கு அன்னியமாக எதையும் காணமாட்டார். தாம் தாமான நிலை பெறுவர். பிரமாணமாகச் சொல்கிறோம். இப்படி சொன்னதில் சந்தேகம் வேண்டாம். கலக்கம் வேண்டாம். பயம் வேண்டாம். இதை எம் குருதேவராகிய சிவம் சொல்ல யாம் சொன்னோம். இது சத்தியமே !



## மனோ மயக்கம்

பாடல் : 34

வருத்தமிலாது இருக்கையிலும் வருத்தம்போல
வழுவுற்ற மாபாவி மனதில் தோன்றும்
விருத்தமதாம் பாவமெலாம் வீந்து மெத்த
விமலமதாம் மனதுடையோருக்கு இவ்வப்யாசம்
கருத்திலுற மிகஎளிதாம் ஆதலாலே
கலங்காமல் எப்போதும் ஞானாப்யாசம்
திருத்தமுறச் செய்வோர்க்கு தேவதேவன்
திருவருளால் திடஞானம் திகழுமன்றோ

***விளக்கம் :***

குழந்தாய்! நாம் சுத்த சுக சொரூபமாக இருந்தும் இந்த மனோ மயக்கத்தினால், வந்து இருந்து மறைகின்ற இந்த ஜகத்தை உண்மையென நம்பி இந்த மகாபாவி மனதினால் கெட்டுப் போனோம். சத்குரு கிருபையினால் இந்த உண்மையை உணர்ந்து கொண்டோம். குற்றமற்ற, மலமற்ற, பாபமற்ற, ஆசையற்ற, குணமற்ற, வினையற்ற, சுத்த மனம் உடையவர்களுக்கு இந்த பிரம்மாப்யாசம் மிக மிக எளிதாக தோன்றும். ஆகையினால் உடல்உலக பிரக்ஞை இல்லாமல், களங்கம் இல்லாமல், கலங்காமல் திடமனதோடு அந்த இறைவனின் திருவடியை பற்றிக்கொண்ட தன்மையினால் (இறைவனும், குருதேவரும் வேறல்ல) உண்மையான திடஞானம் தாமாக தோன்றும்.



## பர பாவனை

பாடல் : 35

அஹம் பிரம்மம் பிரம்மமஹம் அஹமெல்லாமென்று
அகண்டபர ஞானத்தின் அப்யாசத்தை
தகும்பிரம்ம ஞானம்தான் திடமாமட்டும்
தவிராது ஸந்ததமும் பழகுவோருக்கே
அஹம்பிரம்மம் என்னும் ஞானம் அகண்டமான
அவ்வீசன் திருவருளால் ஸஹஜமாகும்
தகும் பிரம்ம ஞானம்தான் ஸஹஜமானால்
தளர்வுதரும் பவபீதி தானே நீங்கும்

**விளக்கம் :**

குழந்தாய் ! ***அஹம் பிரம்மம், பிரம்மம் அஹம் (அதுவே நாம், நாமே அது)*** நாமே அனைத்தும் என்று அகண்ட பரஞானத்தினால் சர்வசதாவும் அப்யாசம் பண்ணிக்கொண்டு வந்தால் தகுதியான அந்த பிரம்மஞானம் நமக்கு தாமாகவே சித்தியாகும். எந்த வினாடியும் பார்ப்பதிலும், கேட்பதிலும், நுகர்வதிலும், பேசுவதிலும், சுவைப்பதிலும், ஸ்பரிசிப்பதிலும் அந்த ஒன்றே பிரகாசிக்கிறது. அனைத்தும் அந்த ஒன்றை அன்றி அன்னியமில்லை என்று முழுமையான பழக்கத்தில் இருப்பவர்களுக்கு இந்த பிரம்ம ஞானம் அந்த இறைவன் திருவருளால் சகஜமாகவே சாத்தியமாகும். அது நமக்கு எளிதாக சித்தித்துவிட்டால் தளர்வை கொடுக்கும் - பயத்தை கொடுக்கும் - மயக்கத்தை கொடுக்கும் - விபரீதத்தை கொடுக்கும் இந்த பவபீதி தாமே நீங்கிவிடும்.



## பாவனையின் உறுதி

பாடல் : 36

பாவனமாம் பரஞானம் ஸஹஜமானால்
அகண்டபர வடிவாகி தாமே நிற்கும்
இகழ்வுதரும் பவபீதி மீண்டும் தோன்ற
இடமில்லை ஆதலினால் முமுக்ஷுவெல்லாம்
சகலமுமே பிரம்மமென்றும் அது நாம் என்றும்
சந்ததமும் சலியாமல் அப்யாசித்தே
துகளில்லாத பரஞானம் அடைந்ததனால்
துயர்மயமாம் பவபீதி தொலைக்க வேண்டும் !

***விளக்கம் :***

நமக்கு உண்மையான பரபாவனை சகஜமாகவே அந்த இறைவன் கிருபையினால் சித்தித்துவிட்டால் அனைத்தும் நாமாக இருக்கும் நிலை பெறுவோம். அங்கு சந்தேகமோ, பயமோ, துக்கமோ, கலக்கமோ வர இடமில்லை. ஆதலினால் பக்குவ ஆன்மாக்களாகிய நாம் எல்லோரும் இடைவிடாமல் காட்சிகளிலும், ஓசைகளிலும் வீழ்ச்சி அடையாமல் அந்த பர சொரூபமாகவே இருக்க பழக வேண்டும். அந்த பழக்கத்தினால் ஜக துன்பத்தைத் தொலைக்க வேண்டும்.



## மனதின் செயலே செயல்

பாடல் : 37

மனந்தன்னிலே செய்ததுவே செய்ததாகும்
மற்றொன்றால் செய்ததெல்லாம் செய்ததாகா
தினம் தினம் திடமான மனதினாலே
திருசியமாய் காண்பதெல்லாம் திருக்கேயான
ஆனந்தபர ப்ரம்மமென்றும் அதுநாம் என்றும்
அகண்டபர பாவனையே செய்வாயாகில்
கனந்தரும் அப்பாவனையால் மனதை வென்று
கலங்காமல் எப்போதும் சாந்தனாவாய் !

***விளக்கம் :***

குழந்தைகளே ! இந்த மனமே அனைத்திற்கும் கர்த்தாவாக இருப்பதால் அதாவது எண்ணம், சொல், செயலாக இருப்பதால் இந்த மூன்றினாலும் செய்யக்கூடிய கர்மாக்கள் புண்ணிய பாபமாக தோன்றி வினைகளை உற்பத்தி பண்ணி ஜனன, மரணத்தைக் கொடுக்கிறது. ஆகவே, இந்த பொல்லாத மனதை எந்த வினாடியும் சுத்தம் பண்ணிக் கொண்டே வந்தால் (அனைத்தும் நீயே, உன்னையலால் வேறு கதியில்லை. இந்த சரீரம் ஓர் பொம்மையே, இந்த செயலுக்கு இது கர்த்தா இல்லை என்று முழுமையாக விட்டுவிட்டால்) புண்ணிய பாப கர்மாக்கள் நம்மை தொடராது. தூலத்தின் செய்கை கர்மா ஆக மாட்டா. மனதின் பாரத்தினால் செய்யும் செய்கை கர்மாவாக பலன் கொடுக்கும். ஆகவே, திட நிச்சயமான மனதினாலே அனைத்தும் அந்த ஒன்றே, அந்த ஒன்றை அன்றி அன்னியமில்லை. அது ஆனந்த பர சொரூபம். **அதுவே நாம், நாமே அது** என்ற அகண்ட பர பாவனை எந்த வினாடியும் செய்வாயாகில் **யத் பாவம் தத் பவதி** என்று வேதம் சொல்வதைப் போல அந்த உண்மை பாவனையினால், பாவனாதீதத்தினால் நீ அதுவாகவே இருப்பாய். அங்கு மனம் மஹத்தாகவே இருக்கும். கலக்கம் இராது. எந்த வினாடியும் சாந்த சொரூபமாகவே இருப்பாய்.

## கற்க கசடு அற

பாடல் : 38

கல்லாத கல்வியெல்லாம் கற்றபோதும்
கலங்காமல் பரப்பிரம்ம ஞானம் பெற்று
அல்லாது பவபீதி விடுக்க வொண்ணா
ஆதலினால் ஆதரவாய் நீயெப்போதும்
எல்லாமும் பரப்பிரம்மம் அது நாம் என்னும்
ஏகமதாம் பரப்பிரம்ம ஞானம் பெற்று
பொல்லாத பவபீதி அனைத்தும் போக்கி
பூரணமாயுள்ள பரம் பொருளேயாவாய் !

**விளக்கம் :**

குழந்தாய் ! இந்த உலகத்தில் எந்த படிப்பை படித்தாலும், எந்த வித்தைகளைக் கற்றுக் கொண்டாலும், ஈஸ்வராதி தேவர்களைப் போல எத்தனையோ அண்டங்களைப் படைத்தாலும், அவைகளை காத்து அழிக்கும் தன்மையை பெற்றுக் கொண்டாலும் கூட அது நீ கற்கும் கல்வி அல்ல. பயமற்ற ஆத்ம ஞானத்தை பெற்று, தாம் தாமாகவே இருக்கும் அந்த ஒன்றாக நீ ஆனாலன்றி, உன் கல்வி முற்றுப் பெறாது. தேவையான அந்த ஒன்றை பற்றிக்கொள். மற்ற அனைத்தையும் விட்டுவிடு. ஆகவே, நீ முக்காலத்தும் எல்லாம் அந்த பர சொருபமே. **அதுவே நாம், நாமே அது** என்ற பிரம்ம ஞானத்தை பெற்று தீங்கு செய்யக்கூடிய அனைத்து பவபீதிகளையும் விட்டு பரிபூரணமாக உள்ள ***"அந்த பரம்பொருள் நீயே"*** ஆவாய்.



## கற்றபடி நில் !

பாடல் : 39

தகும் பிரம்மம் தமக்கயலாய் அணுவுமில்லை
　　தயங்கிய இச் ஜகஜீவ பரங்களெல்லாம்
தகும்பிரம்ம வடிவேயாம் அதுவே நீயாம்
　　தத்துவமாய் நவில்கின்றோம் ஆதலாலே
அஹம் பிரம்மம் பிரம்மமஹம் அஹமே எல்லாம்
　　அஹம் பிரம்மம் அஹம் பிரம்மம் அஹமே எல்லாம்
என்றஹும் பிரம்ம பாவனையே திடமாய் செய்து
　　அயலணுவும் அணுகாமல் அழிப்பாய் மைந்தா !

***விளக்கம் :***

தகுதியான உணர்வு சொரூபமான அந்த பிரம்மம் உனக்கு அயலாக இல்லவே இல்லை. நீ கண்டும், கேட்டும் உண்மையென நம்பிய இந்த ஜகத் ஜீவ ஈஸ்வராதிகள் எல்லாம் உண்மையில் அந்த பரவடிவமே ஆகும். அது உனக்கு அன்னியமாக இலவே இல்லை. பிரமாணமாக சொல்லுகிறோம். இந்த அஹம் பிரம்ம பாவனையை எந்த வினாடியும் திடமாக செய்து குற்ற உணர்வுகளை தள்ளி ***அதுவாகவே நீ ஆவாய்.***



## உறுதியான ஆத்மபாவனை

பாடல் : 40

ஜெகம் பரமும் ஜீவர்களும் சிறிதும் இல்லை
சின்மயமாம் பரப்பிரம்மம் நாமே எல்லாம்
தகும்பிரம்மம் அதுநாமே நாமே எல்லாம்
தகும் பிரம்மம் அதுநாமே நாமே எல்லாம்
என்ற அஹம்பிரம்ம பாவனையே அனிசம் செய்தால்
அதனால் இவ்அயல் எல்லாம் அழிந்தே போகும்
திகம்பரனாய் நிறைந்தெங்கும் திகழா நின்ற
தெரிவுருவாம் **'சிவம் ஆணை'** உண்மை சொன்னோம் !

**விளக்கம் :**

குழந்தாய் ! இந்த உலகம் என்றும், அனைத்து ஜீவ கோடிகள் என்றும் இவைகளை சிருஷ்டிக்கும் கர்த்தாக்கள் என்றும் (ஈஸ்வராதிகள் என்றும்) நாம ரூப குணத்தோடும், மாய சொரூபத்தோடும் பார்க்க வேண்டாம். எல்லாமே சின்மய சொரூபமான அந்த பிரம்மமே. **அதுவே நாம், நாமே அது.** சலனமில்லா மனதோடு இந்த அஹம் பிரம்ம பாவனையை தொடர்பாக செய்து வந்தால், அதனால் ஆபரண மயக்கமும், விட்சேப குற்றமும் (அதாவது பொன்னை ஆபரணமாக பார்க்கக்கூடிய தன்மையும், அந்த ஆபரண மயக்கத்தினால் நான், என்னுடையது என்று சொந்தம் கொண்டாடக் கூடிய குற்ற உணர்வுகளும்) அடைவாக நீங்கிப் போகும். இத்தன்மையினால் நீயே திகம்பர சொரூபனாய் அதாவது எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பர சொரூபனாய் திகழ்வாய். இதை எம் குரு மீது ஆணையிட்டு சொல்கிறோம்.



பாடல் : 41

அலைமனதின் ஓர்மையில்லாத் தன்மையாலே
அஹம்பிரம்ம பாவனையே செய்ய சக்தி
இலதேனும் எப்போதும் சிரத்தையோடு
யாம் பிரம்மம், யாம்பிரம்மம் யாமே எல்லாம்
சலனமில்லா பரமேநாம், பரம்நாம் என்றே
சப்தமிதை உரைத்தாலும் இவ்வறத்தால்
நிலைமருவாது அலைமனது மெள்ள மெள்ள
நிச்சயமாய் நிகழ்த்திய பாவனையில் நிற்கும் !

**விளக்கம் :**

குழந்தாய் ! சலிப்பு அடைகின்ற, சர்வசதாவும் அலைகின்ற இந்த மனதானது ஓர்மையில்லாத் தன்மையினால் உடல் உலக் இன்ப துன்பங்களிலேயே சர்வசதா சஞ்சரித்துக் கொண்டிருக்கும். இதனால் **"அஹம் பிரம்மம், பிரம்மம் அஹம்" (அதுவே நாம், நாமே அது)** என்ற உறுதியான ஆத்மபாவனையை செய்ய சக்தி இலதேனும் இந்த மனதை, சிரத்தையோடு **நாம் பரமே, நாம் பிரம்மமே** என்ற இந்த சப்தத்தை வாய்விட்டு புலம்பிக் கொண்டிருந்தாலும் இந்த தர்மத்தினால் நிலையில்லாமல் அலையும் மனதானது காலக்கிரமத்தில் அதாவது உன் சாதனையை அனுசரித்து மெல்ல மெல்ல பரபாவனையில் அசையாமல் நிற்கும்.



## அனுபவம்

பாடல் : 42

நிரந்தரமாய் பாவனையில் மனது நின்றால்
நிச்சயமாய்அகண்டபரபாவனையில் லயித்து
திரிந்தலையும் மனதினுடைய விகல்பமாக
தெரிகின்ற பேதமெல்லாம் உடனே தீரும்
தெரிந்திடும் அப்பேதமெல்லாம் தீருமட்டும்
திருஸ்யமாய் தெரிவதெல்லாம் அப்பரமே என்றும்
பொருந்திய அப்பரப்பிரம்மம் நாமே என்றும்
பூரணமாய் எப்போதும் தியானம் செய்வாய் !

**விளக்கம் :**

*நிரந்தரமாய்*, அதாவது இயல்பாகவே நம் ஆத்ம பாவனையில் மனது நிலைத்து நின்று விட்டால், இந்த மனம் அதை உறுதியாக பற்றிக் கொண்ட தன்மையினால் சஞ்சலத்தை விடுத்து, குற்ற உணர்வுகளை தள்ளி, அனைத்தும் நாமென உணர்ந்து, அவனல்லாது அணுவும் அசையாது என்ற திட பிரக்ஞையுடன் பேத எண்ணங்கள் குறைய வழி வகுக்கும். அப்படி அந்த பேத எண்ணங்கள் எம்மட்டு குறைந்திருக்கிறதோ அம்மட்டு ஆத்மபலம் பெருகும். அதாவது பள்ளத்தை நோக்கி விரைவாக ஜலம் பாய்வது போல புறஉணர்வு கெட்டு அக உணர்வு மேலோங்கும். இந்த பேதபுத்தி நம்மிடமிருந்து நீங்கும் பரியந்தம் காண்பனவற்றிலும், கேட்பனவற்றிலும், பேசுவனவற்றிலும் அந்த பரமே அனைத்துமாய் இருக்கிறது. சகலத்திலும் பொருந்திய அந்த **பரம் நாமே, நாமே பரம்** என்று எந்த வினாடியும் அகண்ட தியானம் செய்வாயாக !



## அஹம் பிரம்மம் ஜகம் பிரம்மம் பாவனை

பாடல் : 43

நிரந்தரமாய் பாவனையே செய்யாவிட்டால்
நிலையற்ற மனதுடைய விகல்பம் தீராது
திரிந்தலையும் மனதுடைய விகல்பம் தானே
தீராத பவமென்றே தோற்றுமன்றோ
பரிந்து நிதம் பாவித்து மனோ விகற்பம்
பற்றறவே தீர்ந்தோருக்கு எவ்விதத்தும்
பொருந்தியதன் சொரூபநிலை புரையொன்றின்றி
பூரணமாய் புத்தியினில் பொருந்தும் சொல்லாய் !

**விளக்கம் :**

நாம் நிரந்தரமாக இடைவிடாமல் ஆத்மபாவனை செய்யாவிட்டால் அதாவது **அதுவே நாம், நாமே அது** என்ற அகண்டபரபாவனை செய்யவில்லையானால் நிலையில்லாத இந்த மனதுடைய சங்கல்ப விகல்பமாகிய கற்பனைகள் சாமானியமாக தீராது. சர்வசதாவும் சலிக்கின்ற இந்த மனதின் அசைவினால் உடல் உலக உணர்ச்சிகள் தீராத பவம் என்று தோற்றும் அதாவது பந்தபாச பிணைப்புகளாத் தோற்றும். ஆகவே ஓர்மித்த கவன சக்தியினால் கற்பனைகளைவிடுத்து அதாவது உடல் உலக எண்ணங்களை தவிர்த்து பர எண்ணத்தை சர்வசதாவும் வகுத்து தம் ஆத்ம பலத்தில் மனம் நிலைத்து நின்றால் குற்றமற்ற புத்திதனில் ஆனந்தமாக நிலைத்து நிற்க முடியும்.



## ஸத்குரு தரிசனமும் ஸாதுக்கள் சங்கமும்

பாடல் : 44

ஸத்குருவின் சந்நிதியில் ஓர்ந்த வண்ணம்
சாதுக்கள் சகவாசம் செய்தங்கங்கே
நிர்குணமாம் பரப்பிரம்ம சொரூபம் தானே
நிகிலமுமாம் **அதுவேநாம் அதுவே உண்மை**
அக்ஷரமாம் பிரம்மமதே வேதாந்தங்கள்
அனைத்திற்கும் பொருளாகும் என்றிவ்வண்ணம்
தக்கபர நிர்ணயமே திடமாய் செய்தல்
தளர்வையெல்லாம் தவிர்க்கின்ற விசாரமாமே

***விளக்கம் :***

குழந்தாய் ! நம்முடைய ஸ்ரீ சத்குரு சந்நிதானத்தில் உண்மை உணர்வுடன் கேட்டவண்ணம் சாதகர்களாகிய நாம் எங்கெங்கு கண்டாலும், எதை பேசினாலும் ஸ்ரீ குருதேவரிடம் உணர்ந்தவற்றையே மேலும் மேலும் விசாரித்து மனத்தெளிவு பெற்றுக் கொண்டு வந்தால், ***அனைத்தும் அந்த ஒன்றே, அதுவே நாம், நாமே அது,*** அனைத்து வார்த்தைகளும் பிரம்ம சொருபமே என்று வேதாந்தங்கள் சொல்லக்கூடிய பொருளும் இந்த ஒன்றே இதற்கு அன்னியமாக கற்க வேண்டிய கல்வி எதுவும் இல்லை நமக்குத் தகுந்தது ஸ்ரீ குரு கிருபையினால் உண்மையாகக் கிடைத்துவிட்டது இதைத்தவிர நமக்கு எதுவுமே தேவை இல்லை. இந்த ஒன்றே நமக்கு மன சோர்வையும், மன கஷ்டங்களையும், மரண பயத்தையும் சந்தேகக் குற்றங்களையும் நிவர்த்தி செய்கின்ற அரிய மருந்தாகும் என உணர்வாய்.



பாடல் : 45

ஜோதிமிகு பரப்பிரம்மம் எல்லாம் என்றும்
சுத்தமதாம் பரப்பிரம்மம் அதுநாம் என்றும்
சாதித்த விசாரமிகு ஸாதுக்கட்கே
சாற்றும் பரபாவனைதான் சார்வதல்லால்
தீதுற்ற தேகாதி நாமே என்றும்
திருஸ்யமாம் ஜெகமுதலீது உண்மை என்றும்
கோதுற்ற அவிசாரம் மேலிட்டோர்க்கு
குறைவற்ற பாவனை எவ்விதமாய்க் கூடும் !

**விளக்கம் :**

சுயம்ஜோதியாக இருக்கக்கூடிய அந்த பிரம்ம சொரூபமே அனைத்தும் என்றும், அதுவே நாம் என்றும், திட பிரக்ஞையுடன் சாதித்த உண்மையான சாதகர்களுக்கே (பொறுமையே ஆபரணமாக பூண்டு சாதனை செய்பவர்களுக்கே) இந்த சுத்தமான பிரம்ம ஞானம் சாரும். அதாவது இந்த சத்சங்கமே நித்சங்கமாக முடியும். அந்த நித்சங்கமே மோகமற்ற ஆத்மபாவனையில் முடியும். அந்த ஆத்ம பாவனையாலேயே பிறவி அற்ற மோக்ஷநிலை பெறமுடியும். இதில் சாதனை பண்ணும்போது தேகத்தையும் உலகத்தையும் மறக்காமல், தேகம் உண்மையென்றும், ஜகம் உண்மையென்றும் (பொய்யான உலகம் உண்மையென்றும்) அதில் பிணைக்கப்பட்ட அவிசாரமாகிய பாச பந்த எண்ணங்களை அதிகமாக பாவனை செய்பவர்களுக்கு குறைவில்லாத இந்த ஆத்மபாவனை ஒரு காலும் கூடாது.



## மனோமய பிராந்தி மயக்கம்

பாடல் : 46

விதியுடனே ஹரிஹரனும் பிராந்தியேயாம்
விராட்டுடனே சுராட்டுமிக பிராந்தியேயாம்
மதியிலுரும் பிரம்மாவும் பிராந்தியேயாம்
மற்றுமுள தேவர்களும் பிராந்தியேயாம்
நிதமுனிவர் சித்தர்களும் பிராந்தியேயாம்
திகழ்கின்ற மனுக்களெல்லாம் பிராந்தியேயாம்
சர்வ சுராசுரர்களெல்லாம் பிராந்தியேயாம்
சமரம் முதல் சரிதமெல்லாம் பிராந்தியேயாம் !

பாடல் : 47

விரவும் அயன்செயலான ஜகசிருஷ்டியாதி
விதம்விதமாம் கதையெல்லாம் பிராந்தியேயாம்
ஹரியினுடைய பாலனமாம் செய்கை முதலாம்
அவதாரலீலையெல்லாம் பிராந்தியேயாம்
ஹரனுடைய சம்ஹாரம் முதலாம் செய்கை
அவதாரலீலையெல்லாம் பிராந்தியேயாம்
வர்ணமுடன் ஆச்சிரம பேதம் பெற்ற
வகை வகையாம் மானிடரும் பிராந்தியேயாம் !

***விளக்கம் :***

அனைத்து ஜீவ கோடிகளுக்கும் விதியை நிர்ணயம் பண்ணக்கூடிய பிரம்மாவும், காக்கும் ஹரியும், அழிக்கும் ஹரனும் கற்பனா சொரூபமே. அதாவது பிராந்தி மயக்கமே. அந்த தேவ தெய்வங்களுடைய விராட் விஸ்வரூபம் அனைத்தும் மனோமய பிராந்தி மயக்கமே. முப்பத்து முக்கோடி தேவர்களும், அவர்கள் உலகமும், அவர்கள் இயக்கமும், நாற்பத்து எண்ணாயிரம் மஹரிஷிகளும், கந்தர்வர், கின்ன, கின்புருஷர், துன்புறு நாரதாதி சித்தர்கள் ஆகிய அனைத்தும் அவர்களுடைய வம்ச விருத்திகளும், அசகாய சூரசக்திகளும், நாம் புராண இதிகாசங்கள் மூலமாக கேட்கக்கூடிய அனைவருடைய கதைகளும் மனோமய பிராந்தி மயக்கம் என உணர்வாய்.

பாடல் : 48

முக்தியுற வேண்டுமென இச்சை வைத்தல்
    **மோக்ஷத்தின்** பொருட்டேதன் உயிர் தரித்தல்
பக்தியுடன் நன்றாக விசாரம் செய்தல்
    பாங்காக **பரப்பிரம்ம ஞானம்** எய்தல்
இத்துவித ஜகத்தையெல்லாம் அறமறத்தல்
    இத்தனையும் பரமார்த்த தசையில் பொய்யே
அத்வைத பரப்பிரம்மம் ஒன்றே உண்மை
    அதுவே நீ இதில் அணுவேனும் ஐயமில்லை !

**விளக்கம் :**

குழந்தாய் ! நாம் முக்தி அடைய வேண்டும் என்று ஆசை வைத்தால், பதமுக்தியின் பொருட்டு அந்த ஆசை வைக்காமல் பரமுக்தியை அதாவது பிறவா நிலையை பெற வேண்டுமென்றே தம் பிராணனை வைத்திருக்க வேண்டும். பக்தி பண்ண வேண்டும் என்று ஆசை உண்டானால் ஆத்ம விசாரம் செய்து எந்த தெய்வத்தை நாம் உபாசனை செய்கின்றோமோ அந்த தெய்வத்திடம் நம்முடைய அனைத்தையையும் சர்வ சங்க பரித்தியாகம் செய்து அனைத்தையும் விட்ட நிலையில் ஆத்மானந்தம் பெறும் நிமித்தமாக இருக்க வேண்டும். கண்ணில் காணக்கூடிய இந்த துவைதமான ஜகத்தை முழுமையாக மறக்க வேண்டுமானால் ***அந்த ஒன்றே நாம், நாமே அது*** என்ற பரமார்த்த தசையில் அனைத்தும் பொய்யென உதற வேண்டும். முடிந்த முடிவாகிய அத்வைத சொரூபமாகிய அந்த பிரம்மம் ஒன்றே உண்மை. "***அதுவே நாம், அதுவே நீ, அதுவே அனைத்தும்***". இதில் அணுவளவேனும் சந்தேகமில்லை என்று சாதனை செய்வாயாக.



## உலக நியதியும் உண்மையின் சொரூபமும்

பாடல் : 49

பலவிதமாம் ஜாதி என்ன ? நீதி என்ன ?
பகுப்புற்ற வர்ணாச்ரம பேதம் என்ன ?
சலனமுறும் கர்மம் என்ன ? கர்த்தா என்ன ?
சாதிக்கும் பலன் என்ன ? சதசத் என்ன ?
கலக்கமுறும் காட்சி என்ன ? காண்போன் என்ன ?
கருதிய இப்பேதமெல்லாம் சுத்தப் பொய்யே
அலைவுபெறா பரப்பிரம்மம் ஒன்றே உண்மை
அதுதானே உன்னுடைய நிஜ சொரூபம் !

***விளக்கம் :***

குழந்தாய் ! இவ்வுலகில் கோடானு கோடி ஜாதிகளும், அந்த ஜாதிகளுக்கேற்ற மதமும், மதத்திற்கு ஏற்ற தேவ தெய்வங்களும், அவைகளை அடைய தேவையற்ற நீதி முறைகளையும் வகுத்து, வகுத்துச் சொல்லும் ஆசிரம தர்மங்களும், சர்வசதாவும் அசைவை கொடுக்கக்கூடிய (குற்றம்) புண்ணிய பாப கர்மாக்களும், அந்த கர்மாக்களுக்கு கர்த்தா ஒருவன் இருக்கின்றான். அதாவது ஈசன் ஒருவன் இருக்கின்றான் என்ற மனோ மயக்கமும், படக்காட்சி போலும், பொம்மலாட்டம் போலும் நடைபெறும் இந்த இல்லாத காட்சிகளில் மயக்கமும், அதை காண்பவனாக தன்னை தனித்து பார்க்கின்ற, (அதாவது ஜீவ அம்சமாக தன்னை உணர்ந்து) இப்படிப்பட்ட பேதபுத்தி உள்ள அனைத்து நிகழ்ச்சிகளும் சுத்தப் பொய்யே. அசைவற்ற அந்த பரசொரூபம் ஒன்றே உண்மை. அதுவே நாம் என உணர்வாயாக.



பாடல் : 50

பெருமைமிகும் தீர்த்தமென்ன ? ஸ்தலமென்ன ?
பிறங்கியிடும் தெய்வமென்ன ? சேவை என்ன ?
மருவியிடும் தருமமென்ன ? பாபம் என்ன ?
மற்றுண்ணும் சொர்க்கம் என்ன ? நரகம் என்ன ?
இருமை என்ன ? ஒருமை என்ன ? நாநா என்ன ?
இதுமுதலாம் பேதமெல்லாம் சுத்தப் பொய்யே
அருவமதாம் பரப்பிரம்மம் ஒன்றே உண்மை
சந்ததமும் அதுவே நின் நிஜசொரூபம் !

**விளக்கம் :**

குழந்தாய் ! நாம் ஏதேதோ பாபங்கள் செய்துவிட்டோம் என்றும், அவைகளை நிவர்த்திக்க கங்கா, யமுனா, சரஸ்வதி, பிரம்மபுத்ரா, காவேரி போன்ற தீர்த்தங்கள் என்றும், அதன் கரையில் அமர்ந்திருக்கும் மண்ணால் ஆன கோவில்களையெல்லாம் ஸ்தலங்கள் என்றும், நமக்குள் இருக்கும் அந்த தெய்வத்தை உணராமல் அந்த கோவில்களில் தான் தேவ தெய்வங்கள் குடியிருக்கிறது என்றும், அவைகளை சேவித்தால் புண்ணிய பலன் பெறலாம் என்றும், அந்த தேவ தெய்வங்களின் சொர்க்காதிபத்யமாகிய லோகாந்திர பிராப்தி பெறலாம் என்றும், அவைகளை சேவிக்காவிட்டால் பாபம் என்றும், அந்த பாபத்தினால் நரகமென்றும், நானாவிதமாக நாமாகவே எழுதிவைத்த சாஸ்திர வேத புராண இதிகாச மந்திரம் அனைத்தும் சுத்தப்பொய்யே. நாமரூபம் அற்றதாயும், சுத்தபர சொரூபமாயும் இருக்கும் நம் ஆத்ம சொரூபம் ஒன்றே உண்மை. எந்த வினாடியும் **அதுவே நாம், நாமே அது** என்று உன் நிஜரூபத்தில் நிலைத்து நிற்பாயாக !



பாடல் : 51

சாந்திமுதல் சாதனமும் மனதின் தர்மம்
　　சாதிக்கும் சிரவணமும் மனதின் தர்மம்
ஆந்தரமாம் மனனமுமே மனதின் தர்மம்
　　அங்குற்ற தியானமுமே மனதின் தர்மம்
ஏந்தியிடும் மனதுருவே இலாமையாலே
　　இதன் தர்மம் என்னும் இவைகள் இருப்பதெங்கே
சாந்தமதாம் பரப்பிரம்மம் ஒன்றே உண்மை
　　சந்ததமும் அதுவே நின் நிஜ சொரூபம் !!

***விளக்கம் :***

உலகின் குற்றமும், குற்ற நிவர்த்தியும், நிவர்த்தியின் சாதனமும், அந்த சாதனத்தை கேட்பதுவும், அதையே எண்ணுவதும், அதையே தியானம் செய்வதுவும் அதனால் ஆத்ம சாந்தி பெறலாம் என்ற மனோ மயக்கமும் இவை அனைத்தையும் இந்த இல்லாத மனதாலேயே செய்ய எண்ணுவதால் அவை அனைத்தும் பொய்யே. காரணம் இவை அனைத்திற்கும் கர்த்தாவாக இருக்கக்கூடிய மனமே அங்கு இல்லை. மனமில்லா தன்மையினால் சாதனை ஏது ? சாதிப்பவன் யார் ? சாதித்து பெறும் பலன்தான் என்ன ? ஆகவே இவை அனைத்தையும் தள்ளி சத்திய சொரூபமாகவும், சாந்தி மயமாகவும், சுக சொரூபமாகவும் இருக்கும் "**அந்த பிரம்மம் ஒன்றே உண்மை. அதுவே நாம், நாமே அது**" என்று எந்த வினாடியும் உன் யதார்த்த சொரூபத்தில் நிலைத்து நிற்பாயாக !



## அடக்கம்

பாடல் : 52

மிகமிகவும் ஸப்தத்தை விரும்பிச் சொல்லல்
மிகவாக்கின் துக்கத்திற்கு ஏதுவாகும்
புகல் பலவாம் ஸப்தத்தை விரும்பிக் கேட்டல்
பொருந்தும் மனோமயக்கத்திற்கு ஏதுவாகும்
வெகுவிதமாம் அர்த்தத்தை விசாரம் செய்தல்
விவித மனோ துக்கத்திற்கு ஏதுவாகும்
தகுமகனே ! ஆதலினால் அனைத்தும் தள்ளி
தற்பிரம்மம் தாம் எனவே நிதித்யாசிப்பாய் !

**விளக்கம் :**

குழந்தாய் ! சாதனையாளர்களாகிய நாம் இந்த ஒன்றை மிகவும் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டும். நாவடக்கம் என்பது மிக மிக முக்கியம். வேதம் சொல்கிறது. "***சங்கல்பமே உலகம், சங்கல்ப ரஹிதமே மோக்ஷம்***". எண்ணியதை எல்லாம் பேசிவிடக்கூடாது. எண்ணமானது பார்ப்பதிலும், கேட்பதிலும் லயித்து விதவிதமான, விநோதமான மனோ நுகர்ச்சிக்கு தக்கபடி ஸப்தார்த்தமாக இந்தவாய் புலம்பிவிடும். அந்த புலம்பலே பிறவிக்கு வித்தாகிய புண்ணிய பாப கர்மாக்களை சேகரித்துக் கொள்ளும். ஆகவே கண்டதையும், கேட்டதையும் உண்மையென நம்பி பேசிவிடக்கூடாது. இரண்டு ஒரு நிமிடம் அடங்கி இருந்து நிதானித்து பேச வேண்டும். பிறர் பேசுவதை கேட்டவுடன் சாந்தமாக, சமாதானமாக அவர்களுக்கு உண்மையை சொல்லிவிடுவோமே என உன் மனம் துடிக்கும். அந்த நிமிடம் அந்த சப்தார்த்தத்தில் உன் மனம் அசைந்து கொண்டிருப்பதால் நீ சொல்லக்கூடிய வார்த்தை விபரீதத்தை உண்டுபண்ணுமே அன்றி நிலையான சுகத்தை கொடா. நீ அடங்கி இருந்தால் எதிரில் பேசப்பட்டவர்களுக்கு தாமாக உண்மை புரியும் அல்லது உனக்குள் இருக்கும் ஆத்மசக்தி உன்னை அறியாமலேயே அடங்கி சில

வார்த்தைகளை தாமாக கொடுக்கும். அது இதமாகவும், உண்மையாகவும், சந்தேக விபரீத துக்கங்களை கொடுக்காமலும் அமையும். நம் வாக்கே ஜகத்ஜீவ ஈஸ்வராதிகளாக இருப்பதால் எண்ணமும், சொல்லும் ஸ்ரீ பகவத் சப்தார்த்தமாகவே இருக்க வேண்டும். அது முழுமையான சரணாகதி ஆகும். ஆகவே அடங்கி இருக்கப் பழகு. பிறர் சொல்லும் வார்த்தைகளை விரும்பி திரும்ப திரும்ப கேட்டால் அங்கு மனோ மயக்கம் உண்டாகி உண்மை புரியாமல் போய்விடும். நீ உன் குருதேவரிடம் ஞான பாடத்தை விரும்பி கேட்டு அனுபவித்துக் கொண்டிருக்கும்பொழுது அதை ஒத்து உன் சாதனையை திருப்பி உன் சக சாதகர்களிடம் பேசும் பொழுதும் அவற்றை கேட்கும் பொழுதும் ஸ்ரீகுரு நாம ஸ்மரணையுடன் இருந்தால் சப்தத்தை கேட்கவும் முடியாது. பேசவும் முடியாது. அங்கு மனம் மஹத்தாக இருக்கும். அனுபவம் ஆன தன்மையினால் பிற வாசகங்களை விரும்பி கேட்கவும் முடியாது. மனம் மயக்கத்தை அடைந்து சிதறவும் செய்யாது. குருதேவர் சொல்லும் வாசகத்தை அவர் கொடுக்கும் அர்த்தத்தை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டுமே அன்றி உன் புத்திக்கு தக்கபடி மனோமய கற்பனைக்கு தக்கபடி இது இப்படி இருக்குமோ, அது அப்படி இருக்குமோ எனபல கருத்துக்களை விதவிதமான கற்பனை செய்தால் உன் மனமும் கலக்கமுறும். சந்தேகம் அடிக்கடி தோன்றும். விதவிதமான துன்பத்தை உண்டு பண்ணும். அர்த்தம் அனர்த்தமாகும். திடஞானம் சித்திக்காது. ஆகவே கற்பனையை விட்டுவிட்டு குருதேவர் கொடுக்கும் வாக்யத்தை அப்படியே மனனம் செய்து ஆழ்ந்து தியானிப்பாயாக. எமக்கு தகுந்த குழந்தாய் ! மேலே சொன்ன மூன்றினவற்றிலும் உன் மனதை ஸ்திரப்படுத்தி மற்றும் அனைத்து காரிய காரணங்களையும் தள்ளி **அதுவே நாம், நாமே அது** என உறுதியாக நிற்பாயாக.



## நிலைத்து நிற்றல்

பாடல் : 53

ஆதலினால் தானியத்தை அடைந்த பின்னர்
அங்குள்ள பதர்களை எறிதலே போல்
ஏதமற உணர்பொருளை உணர்ந்த பின்னர்
இங்குற்ற நூலையெல்லாம் எறிதல் வேண்டும்
வாதகமாம் நூலையெல்லாம் எறிந்த பின்னர்
வருந்தியுமே ஆதரவாய் இடைவிடாமல்
போதமுற சாதகமாம் நிதித்யாசத்தை
புரியுடனே பூரணமாய் பழகல் வேண்டும் !

**விளக்கம் :**

குழந்தாய் ! நவதானியங்களை குத்தி அதை முறத்தால் புடைத்து தானிய மணிகளை மட்டும் எடுத்துக்கொண்டு அதன் பதர்களை தூர எறிந்து விடுவது போல, உண்மை பொருளை உணரும் நிலையில் உணர்ந்து அதுவாகவே ஆன பின்னர் மற்ற எந்த நூலையும் படிக்கக்கூடாது. அப்படி படித்தால் சபலம், சலனம், சந்தேகம் போன்ற குற்ற உணர்வுகளை மேலும் மேலும் கொடுத்துக் கொண்டே இருக்கும். ஆகவே, அவைகள் அனைத்தையும் தூரத் தள்ளிவிட்டு இடைவிடாமல் ஆத்ம சாதனையாகிய **அதுவே நாம், நாமே அது** என திடமாக பழகி பழகி அது ஆக வேண்டும்.



## சித்தம் சிவமே

பாடல் : 54

மனதையல்லால் ஜகம் முதலோர் அணுவுமில்லை
மனததுவே ஜகமுதலாய் தோற்றலாகும்
சொனமனது சங்கல்ப வடிவேயாகும்
சோதிக்கின் சங்கல்பம் சித்தாய் தீரும்
மனதுடைய சங்கல்பம் சித்தாய் தீரின்
மனததுதான் சின்மயமாம் **சிவமே**யாகும்
ஜனனமில்லா சின்மயமாம் **சிவம்நாம்** என்றே
சிந்தித்து சிந்தித்து சிவமே ஆவாய் !

***விளக்கம் :***

குழந்தாய் ! இந்த மனதை அல்லாது ஜகம் தனியாக இல்லவே இல்லை. அதைப் போன்று ஜகத் ஜீவ ஈஸ்வராதிகளும் இல்லை. எண்ணமே உலகம். எண்ணங்களை மறந்த நிலையே மோக்ஷம். இந்த மனதே எண்ணமாக தோன்றி கற்பனையாக விரிந்து சுகதுக்கமாக தோற்றிக்கொண்டே இருக்கும். இந்த மனதுக்கு நம் கற்பனையே வடிவமாகும். நம் கற்பனையை விட்டுவிட்டால் மனதிற்கு வடிவமே இல்லை., இந்த எண்ணம் தோன்றிய இடம் அந்த பரசொரூபமே. எண்ணங்களை கீழ் எழுந்தவாரியாக பார்த்தால் உடல் உலகமாக தோற்றும். அதே எண்ணங்களை மேல் எழுந்த வாரியாக பார்த்தால் பரமாக தோற்றும். மனதுடைய சங்கல்பம் எல்லாம் ***அந்த ஒன்றே, அனைத்தும் நீயே, அந்த ஒன்றை அன்றி அன்னியமில்லை*** என்று தீர்க்கமான முடிவோடு ஸ்திரப்படுத்திவிட்டால் இந்த எண்ணமே சித்சொரூபமான சின்மயமான சுத்த சொரூப சிவமாகிவிடும். ஜனன மரணத்தை கொடுக்காத சிதாகாயமான சிவம் நாம் என்று சிந்தித்து, சிந்தித்து சிவமே ஆவாய்.



பாடல் : 55

சின்மயமாம் எம்மிடையே கனவில் கண்ட
ஜகம்முதலாய் எமக்கயலாய் இலாததேபோல்
சின்மயமாம் எம்மிடையே நனவில் கண்ட
ஜெகம் முதலாய் எமக்கயலாய் இலவே இல்லை
சின்மயமாம் **நாம் தானே** என்றும் ஒன்றாய்
செறிந்தகில பூரணமாம் சிவமாய் நின்றோம்
சின்மயமாய் **யாம் தாமாய்** நின்றோம் என்றே
சிந்தித்து சிந்தித்து சிவமே யாவாய் !

**விளக்கம் :**

நம்மிடையே கனவில் கண்ட பொருள்கள் நமக்கு அயலாக தோற்றுவதே இல்லை. அதே போல் நம்மிடையே நனவில் காணும் இந்த ஜகம் முதலாகிய காட்சி எல்லாம் நமக்கு அயலாக இலவே இல்லை. நாம் கற்பனை கொண்டு ஜகத்தைப் பார்க்கிறோம். ஜகம் இருப்பதாக உணர்கிறோம். நம் கற்பனையை விட்டுவிட்டு அனைத்தும் ஸ்ரீ பரமார்த்த சொரூபமே என்று உறுதியுடன் நின்றால், அனைத்து நாமரூப காட்சிகளையும் அதன் அசைவுகளையும் (குணங்களையும்) இல்லாமல் மறந்து, அனைத்தும் பூரணமான அந்த ஒன்றே, அதுவே உலகமாகவும் அனைத்து ஜீவ உடலாகவும், நாம் தொட்டு அனுபவிக்கும் புறப்பொருளாகவும் இருக்கிறது. அது நம் யதார்த்த சொரூபமே என தாம்தாமாக நிற்க பழகிவிட்டால், அந்த சிவ சொரூபமாகவே இருப்போம். அந்த சிவமாகிய பர சொரூபம் நாமே என சிந்தித்து, சிந்தித்து சிவமே ஆவாய்.



## திருமூலர் வாக்கு

பாடல் 56

படருற்ற நூல்தானே படம் போலாக
பரவி அதில் குறுக்கு நெடுக்காவதே போல்
தொடர்புற்ற பரம்தானே ஜகம் போலாக
தோற்றி அதில் குறுக்கு நெடுக்காக நிற்கும்
மடருற்ற விவேகத்தால் அறைந்த வண்ணம்
மாய்த்து எவையும் அகண்டபர பிரம்மமென்றும்
தடமுற்ற பரப்பிரம்மம் அது நாம் என்றும்
தடையறவே பாவித்து தளர்வு தீர்வாய் !

***விளக்கம் :***

புடவை மற்றும் வஸ்திரங்களில் தோற்றப்படும் சித்திரமாகிய படம், அதிலுள்ள நூலை அன்றி அன்னியமில்லை. நூலை குறுக்கும் நெடுக்குமாக பின்னி வைத்திருப்பதனால் அந்த படம் தோற்றுகிறது. அந்த நூலை தனித்தனியாக பிரித்துவிட்டால் அங்கு படம் தோற்றாது. அதைப் போல சிவ சொரூபமான பரசொரூபம் தம்மைத்தாமே தோற்றுவித்துக் கொண்டு இந்த ஜகத்தையும் ஜீவர்களையும் தமக்குள்ளயே உண்டு பண்ணிக் கொண்டு அனேகவித லீலா வினோதங்களை தமக்குத் தாமே செய்து கொண்டிருக்கிறது.

**மரத்தை மறைத்தது மாமதயானை**
**மரத்தில் மறைந்தது மாமதயானை**
**பரத்தை மறைத்தது பார்முதல்பூதம்**
**பரத்தில் மறைந்தது பார்முதல்பூதம்**

- திருமூலர்

மரமாக பார்த்தால் யானை தோற்றுவதில்லை. யானையாகப் பார்த்தால் மரம் தோற்றுவதில்லை. பரமாக பார்த்தால் உடல் உலகம் தோற்றுவதில்லை. உடல் உலகமாக பார்த்தால் அங்கு பரம்

தோற்றுவதில்லை. இதுவே உண்மை. இப்படி உன் தீக்ஷண்ய அறிவால் யாம் சொன்னவண்ணம் உணர்ந்து கொண்டு அதிஷ்டானத்தில் தோன்றும் ஆரோப நாமரூபத்தை மறந்து, சத்திய சொரூபமாகிய பரப்பிரம்மம் ஒன்றே என்றும், அதுவே நாம் என்றும் சந்தேகமில்லாமல், கலக்கம், பயம் இல்லாமல் தடையற்ற உறுதி நிச்சயத்தினால் அந்த பர சொரூபமே ஆவாய்.



## சுத்த மாயையும் மலின மாயையும்

பாடல் : 57

பங்கற்ற பரப்பிரம்ம சொரூபம் ஒன்றே
பரமார்த்த தசையிலுள்ள வஸ்துவேனும்
அங்குற்ற அனந்தவித சக்திக் கெல்லாம்
ஆதாரமாக ஒரு மாயா சக்தி
அங்குற்றது அதனால் அச் சொரூபம் தானே
தயங்கிய இச்சித்தமென விவர்த்தமாகும்
பொங்குற்ற சித்தமதே அனந்தகோடி
புவனமுதல் பொய்வடிவாய் தோற்றுமன்றே !

**விளக்கம் :**

பங்கமில்லாத, குற்றமில்லாத, குறைவற்ற, பூரண சொரூபமான அந்த பரமார்த்த சொரூபம் ஒன்றே சர்வ வியாபகமாக எங்கும் இருக்கிறது. அது தனக்குத்தானே பஞ்ச மூர்த்திகளையும் சிருஷ்டித்துக் கொண்டு அவற்றிற்கு தக்க சக்திகளை எல்லாம் கொடுத்துக் கொண்டு இவைகளுக்கு ஆதாரமாக மூலப்பிரகிருதி என்ற ஒரு சக்தியை சிருஷ்டி பண்ணி அதன் மூலமாக பஞ்ச பூதங்களையும், பஞ்சபூத காவியமான உலகங்களையும், உடல்களையும் தாமே ஏற்படுத்தி, தாம்தாமே அதனுள் புகுந்து அவற்றை புண்ணிய பாப கர்மாக்களுக்குத் தக்கபடி இயக்குவதற்கான தேவ தெய்வ சொரூபங்களையும் உற்பத்தி பண்ணி கண்ணில் காணமுடியாத கிருமி, கீடகம் முதல் ஊர்வன, நடப்பன, பறப்பன, நீந்துவன அனைத்தையும் தன் மாயா சக்தியினால்தான் தாமே நடப்பித்துக் கொண்டும், அவற்றினுள் மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற அந்தக் கரணங்களையும் உண்டு பண்ணி அனைத்து விகார விவகார காட்சிகளாகவும், அர்த்த அனர்த்த கற்பனை விபரீதத்தை உண்டு பண்ணி இப்பெரிய உலக நாடக மேடையில் தாமே நடித்துக் கொண்டிருக்கிறது. இப்படி உண்மை உணர்வுடன் ஓர்மித்து உணர்ந்து தம் பேரறிவை கூட்டினால் அனைத்தும் பொய்யாகத் தோன்றும். ஆதாரமான அந்த ஒன்றான மெய்யே (அறிவே) எங்கும் பிரகாசிக்கும். அதுவே நாம், நாமே அது என உறுதியுடன் ஆனந்தம் அடைவாயாக.

## பார்வையின் பேதம்

பாடல் : 58

தன்னுடைய சக்தியினால் ரச்சு ஒன்றே
தனக்கு அரவுமுதலாய் காண்பது போல்
துன்னிய தன்சக்தியினால் பிரம்மம் ஒன்றே
துவைதமென விவர்த்தித்து தோற்றினாலும்
மன்னும் அதிஷ்ட்டான பரப்பிரம்மம் தன்னை
**மாசறவே விசாரித்து** காணும் போது
பின்னமெனத் தோற்றிய இத் தோற்றமெல்லாம்
பேதமில்லா பரப்பிரம்ம வடிவேயாகும் !

***விளக்கம் :***

குழந்தாய் ! வீதியில் கிடக்கும் ஓர் கயிறானது மங்கலான இருளில் ஓர் பாம்பாகத் தோற்றும், ஓர் தடியாகவும் தோற்றும், பூமியின் வெடிப்பாகவும் தோற்றும். ஓர் பூ மாலையாகவும் தோற்றும். ஆனால் இருப்பது ஓர் கயிறு மாத்திரம் தான். கயிற்றில் தோன்றிய அனைத்து காட்சிகளும் உன்னுடைய மனோமயக் கற்பனையே தவிர அந்த கயிற்றினுடைய தன்மை எதுவும் இல்லை. இத்தன்மை போல பரப்பிரம்மமாகிய அந்த பரசொரூபம் ஒன்றே உண்மை. ஆனால், அதில் துவைதமென கோடானு கோடி காட்சிகள் தெரிந்தாலும் அதாவது நாமரூபம் தெரிந்தாலும் அந்த நாமரூபத்திறகு அதிஷ்டானமான அந்த பரசொரூபம் ஒன்றே உண்மை என விசாரித்து அறிந்து காணும் பொழுது அனைத்து காட்சிகளும் பொய்யென தோற்றிவிடும். சத்திய சொரூபமான அந்த ஒன்றே மெய்யென உண்மையாகும்.



பாடல் : 59

ஆதலினால் அனவரதமும் அறைந்த வண்ணம்
அகண்டபர நிச்சயமே அப்யாசித்து
பேதமனோ விகல்பமெல்லாம் பெயர்ந்தெப்போதும்
பிரிவற்ற அகண்டபர போதம் பெற்று
ஏதமில்லா ஏகபரவடிவேயாக
இருப்பதுவாம் மோக்ஷநிலை அடைவாய் மைந்தா
வேதமுடிப் பொருளிதனை இசைந்த வண்ணம்
விமலசிவம் விளம்பியவாறு விளங்கச் சொன்னோம்!

**பொருள் :**

ஆகையினால் யாம் எந்த வினாடியும் உனக்கு போதித்த வண்ணம் அகண்ட பரபாவனை உறுதி நிச்சயத்துடன் நீ அப்யாசித்து வந்தால், பேதமான கற்பனா சொரூபம் எல்லாம் படிப்படியாக மறைந்து அழிந்துவிடும். அந்த வினாடியில் உன்னுடைய அகண்டபர போதம் அதாவது அது சமுத்திரம், நாம் ஒரு திவலை (துளி) என்ற அனுபவத்தினால் ஸர்வ வியாபகமாக பரவடிவாய் நீயே ஆவாய். வேதாந்த கருத்தின்படியும், ஸ்ரீகுருதேவர் அருளிய படியும், மஹான்கள் அனுபவப்படியும் உனக்கு இதை விளக்கமாகச் சொன்னோம்.



## இல்லையென்ற தில்லையில்
## இல்லையென்பதும் இல்லையே !

பாடல் : 60

பதம்பதமாய் சொல்லியிடும் **நாமமில்லை**
பதார்த்தமென சொல்லியிடும் **உருவமில்லை**
விதம் விதமாய் விளங்கிய **எப்பொருளும் இல்லை**
விரிந்த ஜகஜீவபரம் எவையுமில்லை
சுத்தமதாய் ஒருகாலும் **ஒன்றும் இன்றி**
**சுதந்தரமாய்** உள்ளபர பிரம்மம் ஒன்றே
நிதம் தவராது அப்பிரம்மம் நாமே என்று
நிலை பெற்ற ஞானத்தால் முக்தனாவாய் !

விளக்கம் :

குழந்தாய் ! தேவ தெய்வங்களும், அவர்கள் உறைவிடமாக ருக்கும் லோகாந்திர பிராப்தியும், அவற்றின் நாமரூபமாகிய சுவர்க்கம், கைலாயம், வைகுண்டம், மணிக்ரீவம், சத்தியலோகம், பிரம்மலோகம் இப்படிப்பட்ட நானாவிதமான நாமரூபமும், அப்படி ஓர் இடமும் இல்லையென உணர்வாய். அனைத்து ஜீவ கோடிகளும் புசிக்கும் பொருளும், காணும் பொருளும், தொட்டு அனுபவிக்கும் பொருளும், பண்ட பதார்த்தமென சொல்லும் அனைத்து நாமரூபங்களும் இல்லவே இல்லை. தோற்றமும், காலாகாலத்தில் மாற்றமும், விதவித நாமரூபத்தோடு கூடிய எப்பொருளும் இல்லவே இல்லை. பரந்து விரிந்த அண்ட பிண்ட சராசரங்களும், அவைகளில் உள்ள நாம ரூபத்தோடு உள்ள அனைத்து ஜீவ வர்க்கங்களும், க்ஷரம், அக்ஷரம் ஆகிய மண்மலைகளும், மரம், செடி, கொடி, புல், பூண்டுகளும், அவற்றின் நானாவிதமான நாமரூபமும் முக்காலத்திலும் இல்லவே இல்லை. நம்முடைய மனோமய கற்பனையினால் ரூபத்தையும் அதற்குரிய பெயர்களையும் நாமாக உண்டு பண்ணிக் கொண்டோமே அன்றி தாமாக அவைகள் ஏற்கவில்லை. மேலே சொன்ன இவைகள் அனைத்திற்கும் ஆதாரமாயும், ஆகாரமாயும், ஆதரவாயும் உள்ளது அந்த காலாதீத பர சொரூபமே அன்றி அன்னியமில்லை.

அது எக்காலத்தும் சுதந்திரமாய் இருப்பதன்றி அடிமைத்தனம் அங்கு இல்லை. அது வேறு எதிலிருந்தும் உண்டானதில்லை. அதிலிருந்து வேறு எதுவும் தோன்றவில்லை. கயிற்றில் தோன்றிய பாம்பு நம் மன பிரமையினால் வந்ததே அன்றி அந்த பாம்பு கயிற்றில் வந்ததும் இல்லை மறைந்ததும் இல்லை. அனைத்தும் நம் மனோமய கற்பனையே. எண்ணினால் தோற்றமுண்டு. நாமரூபம் உண்டு. குணம் குறிகள் உண்டு. அசைவினால் தோன்றும் இன்பதுன்பம் உண்டு. எண்ணாத நிலையில் மனம் கற்பனையை விரிக்காத நிலையில் இவை அனைத்தும் இல்லவே இல்லை. எந்த வினாடியும் அந்த பர சொரூபம் தாம் தாமாகவே தனித்து உள்ளது என்ற நிலை பெற்ற ஞானத்தினால் **நாம் அதுவே, அதுவே நாம்** என்ற உறுதி நிச்சயத்தினால் முக்தி நிலை பெறுவாய்.



## ஞானத்தின் அம்ஸம்

பாடல் : 61

சொல்லும் மலின வாதனையும் மனதின் தர்மம்
சுத்தபர வாதனையும் மனதின் தர்மம்
அலையும் ஒரு வாதனையும் பரத்திற்கு இல்லை
ஆதலினால் அம்மயமாய் நிஷ்டை சார்ந்து
மலினமென சுத்தமென மதிக்கப்பட்ட
மனதுடைய வாதனைகள் ஒன்றும் இன்றி
சலனமில்லா சிலைபோலும் காட்டம் போலும்
சற்றேனும் சலியாமல் சுகித்திருப்பாய் !

***விளக்கம் :***

இந்த இல்லாத உலகிற்கு சாஸ்திர வேத புராணங்களால் அனேக தர்ம அதர்மங்களை நம் இல்லாத வாழ்க்கையின் நிமித்தம் இருப்பதாக பாவனை பண்ணி நாமே எழுதி வைத்திருக்கிறோம். அவை தொன்றுதொட்டு நான்கு யுகத்திற்கும் (அதாவது கிருதா யுகம், திரேதா யுகம், துவாபர யுகம், கலியுகம்) உண்டு என நம்பி இருக்கிறோம். அதைப்போல முன் பாடலில் சொன்ன தேவ தெய்வங்கள் என்றும், அவற்றின் உலகங்கள் என்றும், அவைகளை அடையும் மார்க்கங்கள் என்றும், அந்த மார்க்கத்திற்கு உரிய புண்ணிய பாப தர்மங்கள் என்றும், ஆன்றோர்கள் சொல்லி உணர்த்தியது என்றும் நம்பி இருக்கிறோம். இந்த உலக தர்மத்தையும், அதர்மத்தையும், தெய்வீக தர்மத்தையும், அதர்மத்தையும் இந்த மாயா மனம் இல்லையானால் அனுபவிப்பதற்கு எதுவுமே இல்லை. ஆகவே இந்த தர்ம அதர்மங்களை லௌகீகமாக இருக்கப்பட்ட நாம் மனோநிலையில் அதாவது மனதை மஹத்தாக்கிய நிலையில் கொஞ்சம் கொஞ்சமாக விடுத்து தெய்வீக தர்மத்தோடு பிணைக்க வேண்டும். அனுபவ முதிர்ச்சியினால் இந்த தெய்வீக தர்ம அதர்மங்களையும் பரத்தோடு பிணைத்து இல்லாமல் செய்து விட வேண்டும். லௌகீக

தர்மத்திற்கும், தெய்வீக தர்மத்திற்கும் இந்த மனமே காரணமாக இருப்பதால், கொஞ்சம் கொஞ்சமாக ஸ்ரீ சத்குரு வாக்கியப்படி இவ்விரு தர்மங்களையும் விட்டுப் பழக வேண்டும். (லௌகீக தர்மம் - அசுத்தமாயை, தெய்வீக தர்மம் - சுத்த மாயை). பரத்திற்கு தர்மமே இல்லை. ஆதலினால் அங்கு நாம் சென்று அடையும் பொழுது, ஓர் உப்புக்கட்டி சமுத்திரத்தில் எப்படி கரைந்து விடுகின்றதோ நிராமயம் ஆகி விடுகின்றதோ அதே போல நாமும் கரைந்துவிடலாம். இந்த சாதனை நிலையில் வாதனைகளையும், வேதனைகளையும் (சொல்லால் தர்க்கம் செய்வது, செயலால் வரும் துக்கம்) முழுவதும் மறந்து, நம் சாதனையில் அசைவற்ற கருங்கல்லைப் போலும், பட்ட மரம் போலும் சற்றேனும் சலிக்காமல், சுதந்திரமாய்- ஆனந்தமாய் - சுகசொரூபமாய் அனுபவிக்கக் கடவாய் !



## ஞானியின் தரிசன பயன்

பாடல் : 62

அன்னியமே தோன்றாத அகண்டாகார
அறிவுதனை அடைந்தவனே முக்தனாவான்
இந்தவித அகண்டபர ஞானமுற்றோன்
இவ்வுலகில் எவ்விடத்தும் அரியவனாவான்
அவன் சொல்லவொண்ணா பலகோடி ஜீவருக்குள்
உரமான ஞானமுள்ளோன் ஒருவன் தானே
அன்னவனை தரிசித்த மாத்திரத்தில்
அறம்மேலாம் அகம் எல்லாம் அழியுமன்றோ !

**விளக்கம் :**

குழந்தாய் ! மேலே சொன்ன ஞான அம்ஸத்தை பெற்ற ஓர் பக்குவ ஆன்மா தனக்கு அன்னியமே இல்லாத (இக லோகத்தையும், பர லோகத்தையும் வேண்டாத நிலையில்) அகண்டாகார அறிவு சொரூபமாகவே எந்த வினாடியும் ஆனந்தமாகவே இருப்பான். அவன் முக்திநிலை பெற்றவன் என்று சொல்வதைவிட முக்தனாகவே இருப்பான். இந்த விதம் அகண்டாகார பர ஞானம் உற்றவன் மூன்று உலகங்களிலும் (பூலோகம், பித்ரு லோகம், சுவர்க்க லோகம்) காண்பதற்கு அரியவனாவான். அப்படிப்பட்ட ஒருவன் கோடானுகோடி ஜீவர்களுக்கும் ஆதாரமாகவும், ஆதரவாகவும், அனுபவசாலியாகவும், எவருக்கும் எந்த தீங்கும் செய்யாமலும், அவர்களுக்கு இதமான இன்பத்தை கொடுப்பவனாக, மேலும் பிரம்மானந்தத்தை தருபவனாக அமைவான். அந்த ஸ்ரீமஹானை சாமான்யர்களால் காண இயலாது. பலகோடி ஜன்ம சுகிர்தத்தினால் (உண்மையான தர்மத்தினால்) தரிசிக்க முடியும். அப்படி தரிசித்த மாத்திரத்தில் தரிசித்த பக்குவ ஆன்மாக்களுக்கு அறம் அதாவது தர்மம் மேலோங்கி நிற்கும். அஹம் அதாவது மானாபிமானம் அனைத்தும் அழிந்துவிடும்.

பாடல் : 63

திடஞானி தரிசனமே தீர்த்தமாடல்
திடஞானி தரிசனமே தேவ பூஜை
திடஞானி தரிசனமே ஜப தபங்கள்
திடஞானி தரிசனமே செய்யும் அறங்கள்
திடஞானி தரிசனமே சிவத்தைக் காண்டல்
திடஞானி தரிசனமே சிவத்தின் சேவை
திடஞானி தரிசனமே மேவுதற்கு
திரிவிதமாம் உலகத்தும் அரிதாம் யார்க்கும் !

*பொருள் :*

அப்படி சத்திய சொரூபமான அந்த ஞானியின் தரிசனம் கிடைத்தால் தீர்த்தம், மூர்த்தி, ஸ்தலம் இவைகளில் சென்று அடையும் பயனும், தேவ தெய்வங்களின் பூஜையும், ஜபதப மந்திர தந்திரங்கள் இவற்றின் பயனும், கோடானு கோடி யாகங்கள், அரிய பெரிய தர்மங்கள் அனைத்தும் சுத்த சிவத்தைக் காணும் பேரருளும், அந்த சிவத்திற்கு செய்யும் மஹத்தான சேவையும், உறுதியாக லபிதமாகும் (சித்திக்கும்). அந்த உண்மையான ஞானியின் தரிசனம் பெறுவதற்கு மூவுலகத்திலும் யாவருக்கும் கிடைப்பதற்கு மிக அரிதாகும்.



பாடல் : 64

வரமான ஞானிக்கு மகிழ்வினோடு
　　வளமான போஜனமே அளிப்பதாலும்
ஸ்திரமான ஞானிக்குத் தேவையான
　　திரவியமே சிரத்தையோடு கொடுப்பதாலும்
பரமான ஞானிக்கு பக்தியோடு
　　பலவிதமாம் பணிவிடைகள் செய்வதாலும்
அரிதான மோக்ஷசுகம் எளிதேயாக
　　அடைந்திடலாம் அணுவுமிதில் ஐயமில்லை !

**விளக்கம் :**

பர சொரூபமான அந்த ஞானிக்கு உள்ளன்போடு அன்னபானாதிகள் அளிப்பதாலும், அந்த ஞானிக்கு தூல போசனைக்கு தேவையான பொருள்களைக் கொடுப்பதாலும், அந்த ஞானிக்கு உகந்ததான பல பணிகள் செய்வதாலும் மிக மிக அரிதான பிறவியற்ற மோக்ஷநிலை தாமாக சித்திக்கும். நாமும் அந்த ஞானியின் நிலையை பெற்று விடலாம். இதில் சந்தேகமோ, கலக்கமோ, பயமோ தேவை இல்லை.



## ஆத்ம ஞானத்தின் பயன்

பாடல் : 65

சத்திய ஞானானந்த பிரம்மமல்லால்
ஜக ஜீவ பரங்களெனச் சிறிதும் இல்லை
புத்திரா ! இச் ஜகஜீவர் முதலாம் யாவும்
பூரணமாய் பொருந்திய அப்பிரம்மம் தானே
அத்வைத பரப்பிரம்மம் **அது நீயே**
அறைந்த பொருள் சத்தியமே ஆதலாலே
சித்தமெல்லாம் பிரம்மமென்றும் அதுநாம் என்றும்
நிச்சயமாய் **உணர்வுற்று** நிறைந்து நிற்பாய் !

***விளக்கம் :***

குழந்தாய் ! சத்திய சொரூபமான, சாந்த சொரூபமான, நித்திய ஆனந்தமான அந்த பரசொரூபம் அல்லால் ஜகத்ஜீவ ஈஸ்வராதிகளாகிய, நாமரூப குணத்தோடு கூடிய எந்த ஒன்றும் இல்லவே இல்லை. புத்திரா ! நீ கண்ணில் காணக்கூடிய இந்த ஜகத்ஜீவ ஈஸ்வராதிகளும், அனைத்து ஜீவ கோடிகளும் பரிபூரண சொரூபமாகிய அந்த பிரம்மம் அன்றி அன்னியமில்லை. அது தனக்குத்தானே விளங்குவதாகியும், தனக்குத்தானே பிரகாசிப்பதாகியும், சர்வசதா ஆனந்தமயமாகியும் இருக்கும் ***"அந்த பரம் நீயே, நீயே அது"*** . இதை யாம் சொல்லவில்லை. எம் குருதேவர் உணர்த்த யாம் அனுபவித்து அவர் திருவடிகளில் சத்தியமாக புகல்கின்றோம். நீயும் உன் உடல் உலக உணர்ச்சிகளை எல்லாம் நீக்கிவிட்டு, ***அந்த ஒன்றாகிய*** உணர்வு சொரூபமாகிய பரத்தில் நிலைத்து நிற்பாய்.



பாடல் : 66

நிச்சயமாய் உணர்வுற்று நிறைந்து நிற்கும்
நிலையதுவே **கைவல்ய மோக்ஷமாகும்**
துச்சமிலா அந்த நிலை தொடர்ந்தோர் மீண்டும்
துன்பமுறார் துகண்மருவார் **சுகமே** சார்வர்
**எச்செயலும் செய்து முடித்தவராவர்**
அவர் எப்போதும் ஏகபரவடிவாய் நிற்பர்
அச்சுக பர வடிவான வோர்க் கிங்கு
**ஊன பவ விகார விவகாரம்** ஒன்றுமில்லை !

***விளக்கம் :***

உண்மையாகியும், ஸ்வய உணர்வாகியும், அன்னியமே இல்லாத சுக சொரூபமாகியும், அனுபவ நிலையில் தாம் தாமாக நிற்பதுவே பிறப்பு, இறப்பு அற்ற கிடைப்பதற்கு அரிதான கைவல்ய மோக்ஷமாகும். துக்கம் இல்லாத, சோர்வு இல்லாத, பயம் இல்லாத, சந்தேகம் இல்லாத, சலனம் இல்லாத அந்த சுக சொரூபநிலையை அடைந்து ஆனந்திப்பவர், முக்காலத்திலும் துன்பம் அடைய மாட்டார். துக்கப்படமாட்டார். பயம் எய்தார். அன்னவர் இந்த உலகத்தில் தோன்றி செய்ய வேண்டிய காரியம் அனைத்தையும் செய்து முடித்தவராவர். அவர் எந்த வினாடியும் ஏகமாக பரந்து விரிந்து, ஆனந்தமான பர வடிவாகவே இருப்பர். அந்த சுகத்தை அனுபவித்தவர்களுக்கு இந்த உலகத்திலோ, தேவதெய்வ உலகங்களிலோ எந்த வரவு செலவு கணக்கும் கிடையாது. அவர்களுக்கு பவமாகிய, குற்றமாகிய விகாரங்களும் இல்லை. அதைத் தொடரும் விவகாரங்களும் (பிரச்சனைகளும்) இல்லை.



பாடல் : 67

இப்பொருளைக் கேட்டுணர்வோர் உடனே முக்தி
இசைந்திடுவா் எள்ளளவும் இன்னல் மேவார்
அற்பமிலா ஆனந்தம் அனுபவிப்பா்
அனவரதமும் மங்களமே அடைந்தோராவர்
நிர்பயமாம் நிலைபெறுவா் பவத்தில் மீளார்
நிச்சலமாம் பரப்பிரம்ம வடிவேயாவர்
செப்பியது சத்தியமே சங்கையில்லை
சிவம் ஆணை சத்தியமே சத்தியந்தான் !

***விளக்கம் :***

இந்த ரகசியார்த்தத்தை படித்தும், கேட்டும் உணர்ந்தவர், உணர்வுபூர்வமாக இருந்தால் உடனே முக்தி பெறுவர். எப்பொழுதும் சுகமாகவே இருப்பர். துக்கம் அணுவளவும் அவர்களை அண்டாது. எந்த வினாடியும் மங்களத்தை பெற்றவர்களாவர். பயமற்ற நிலை பெற்றவராவர். இல்லற பவசாகரத்தில் விழாதவராவர். அசைவற்ற, ஆனந்தமயமான அந்த பிரம்ம வடிவமே ஆவர். இதை யாம் பிரமாணமாக சொல்கிறோம். எம் ஸ்ரீ குரு தேவர் உணர்த்த, உணர்ந்து சொன்னோம். இதை உணர்ந்து உன் அனுபவத்தில் சுகமான **"அதுவே *நீ ஆவாய், நீயே அது ஆவாய்*"**. எம் குரு ஆணை, இது சத்தியமே ! **சத்தியமே !! சத்தியமே !!!**



உ

ஸ்ரீ சத்குரு திருவடி துணை !

***முடிவுரை :***

குழந்தைகளே ! இந்த ஸ்ரீமத் ரிபு கீதையானது முக்தி அடையப்பட்டவர்களுக்கு மாத்திரம் தான் கையில் கிடைக்குமே அன்றி மற்றவர்களுக்கு கிடைக்காது. இதை பொருள்பட நம்பிக்கை வைராக்கியத்துடன், சிரவண, மனன, நிதித்யாசத்துடன் (அதாவது கேட்டல், தெளிதல், சிந்தித்தல்) அதுவாகவே ஆகவேண்டும் என்ற உறுதிப்பட்டவர்களுக்கு உறுதியாக சாத்தியமாகும்.

அதாவது :

**" இரண்டென்றான்**
**இரண்டும் ஒன்றென்றான்**
**ஒன்றென்றும் இல்லையென்றான்**
**உணர்வு தெரியலையே "**

***விளக்கம் :***

ஜகத்தாகவும், ஜீவர்களாகவும் முதலில் இரண்டாக தோற்றியது. அனைத்தையும் சரணாகதி பண்ணிய நிலையில் தெய்வம் என ஒன்றாகியது. அந்த தெய்வத்தையும் பரத்தோடு இணைத்துவிட்டால் ஒன்றும் இல்லை என்றாகிவிடுகிறது. ஒன்றும் இல்லா தன்மை பெற்றுவிட்டால் உடல் உலக உணர்வுகள் எப்படி தோன்றும் ? ஆகவே ***"அனைத்தும் ஒன்றே, அது சுக சொரூபமே, அது சிவ அம்சமே, அது நாமே, அது அதை கேட்டுணரும் நீயே"*** இதுவே முடிந்த முடிவாகும்.

ஓ எம் ஜீவன் முக்தர்களே ! மேலே கூறிய ரிபு கீதையின் விளக்கங்களை தனிமையில் ஏகாந்தமாக படித்து, உணர்வுபூர்வமுடன் சிந்தித்து, **“அது நாம், நாமே அது ,எல்லாம் அந்த ஒன்றே”** என்ற சிரத்தை வைராக்யத்துடன் உங்களுக்குள் ஆக்கி கொள்வீர்களானால் நீங்கள் அதுவாகவே இருப்பீர்கள் என ஆசி கூறி வாழ்த்துகின்றோம்.

*குருவடி சரணம் !* *திருவடி சரணம் !*

- திருவடித்தூளி





ஓம் பூர்ணமத : பூர்ணமிதம் பூர்ணாத்
பூர்ண முதச்யதே ! பூர்ணஸ்ய பூர்ண
மாதாய பூர்ண மேவாவ சிஷ்யதே !!

## ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :

ஹரி : ஓம் தத் ஸத் !
ஸர்வம் ப்ரம்மார்ப்பணமஸ்து !!

அனைத்தும்
ஸ்ரீ சத்குரு திருவடிக்கே சமர்ப்பணம் !!!





*குருவடி சரணம் ! திருவடி சரணம் !*

### *பல்லவி*

குருதேவா ! குருதேவா !
திருவடித் தூளிசற் குருதேவா !

### *சரணங்கள்*

அருள்வடிவாம் சற் குருதேவா !
ஆனந்த மோனசற் குருதேவா ! (குருதேவா .......)

இன்பக் கனலே குருதேவா !
ஈர்த்தெமை ஆள்வாய் குருதேவா ! (குருதேவா .......)

உந்தன் திருவடி குருதேவா - எம்
ஊழ்வினை நீக்கும் குருதேவா ! (குருதேவா .......)

எங்கும் நிறைந்திடும் குருதேவா ! - எமை
ஏற்றருள் புரிவாய் குருதேவா ! (குருதேவா .......)

ஐயா ! உந்தன் திருவடியில்
ஒன்றிட அருள்வாய் குருதேவா (குருதேவா .......)

ஓம் குருதேவா ! சரணமையா !
ஔவியம் களைவாய் குருதேவா ! (குருதேவா .......)

குருவடி சரணம் ! குருதேவா ! - உந்தன்
திருவடியே துணை ! குருதேவா ! (குருதேவா .......)

## *அனைத்தும்*
## *ஸ்ரீ சத்குரு திருவடிக்கே ஸமர்ப்பணம்*





அனைத்தும் ஒன்றே !!

அது நலமே !!

அது சிவமே !!

அது யாமே !!

அது நீயே !!

– பிரம்மஸ்ரீ திருவடித்தூளி சுவாமிகள்

